

பா.ராகவன்

## கால் கிலோ காதல்... அரை கிலோ கனவு...!

- ஜில் ஜில் தொடர்கதை

டாக்டர் ராஜேந்திரன்

## கூலா சாப்பிடுங்க!

- டேஸ்டி ட்ரீட்ஸ்



# கல்கி

அதிக பக்கங்கள்



புஷ்பவனம் குப்புசாமி + அனிதா குப்புசாமி

## மனசெல்லாம் மண்வாசம்!

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

## உடையழகு... நடை பழகு!

- மின்னும் மாடல்கள்







# மொட்டைத் தலை போட்ட முடிச்சு!

● சத்தியநாராயணன், அயன்புரம்

**தர்ம சங்கடம் என்றால் என்ன...?**

சகுனி சூதாடக் கூப்பிட்டபோது, அது தவறு என்று தெரிந்தும் க்ஷத்திரிய தர்மத்துக்கு உட்பட்டு, அதற்கு ஒப்புக்கொண்ட தர்மரின் சங்கடம் 'தர்ம சங்கடம்.' இது இதிஹாசம். எனக்கு ஏற்பட்ட இதி-ஹாஸ்யத்தைக் கேளுங்கள். கோயிலுக்கு நண்பனோடு சென்றிருந்தேன். பிராகாரத்தில் அவனை அமர வைத்து 'கடையேழு வள்ளல்கள், கர்ணனின் கவச - குண்டல தானம், வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடிய வள்ளலார்' என்று உபன்யாசம் செய்து, என் ஞானத்தைத் தேவையில்லாமல் தம்பட்டம் அடித்தேன்... என் நாக்கில் சனி என்பதை நான் அப்போது உணரவில்லை. நான் வேட்டி கட்டிக்கொண்டிருந்ததால், பேன்ட் போட்ட நண்பனிடம் என் பர்ஸைக் கொடுத்திருந்தேன். கோயில் வாசலில் இருந்த பிச்சைக்காரர்களைப் பார்த்ததும், என் உபன்யாசத்தால் உசுப்பிவிடப்பட்டிருந்த பாழாய்ப் போன நண்பன், நான் அவனிடம் கொடுத்திருந்த பர்ஸிலிருந்த பணத்தை எடுத்து, தாராளமாக வாரி வழங்கினான். சில பிச்சைக்காரர்களிடம் கூடன் சொல்லி, என் அட்ரஸைக் கொடுத்து வீட்டுக்கு வந்து வாங்கிப் போகுமாறு அன்புக் கட்டளை வேறு இட்டான். தடுக்க முடியாத எனது நண்பனின் இந்த தர்மம், எனக்குச் சங்கடமானது.

● அனன்யா, பெங்களூரு

*மொட்டைத் தலைக்கும் முழங் காலுக்கும் முடிச்சு போட முடியுமா...?*

சமீபத்தில் ஒரு கல்யாணத்துக்குச் சென்றிருந்தேன். மாப்பிள்ளை எனக்கு தூரத்து உறவினன். உயரத்து உறவினன் என்று சொல்லும் அளவுக்கு, மாப்பிள்ளை ஓங்கி உலகளந்த ஆறரை அடிக்கு, சுத்தமான மொட்டைத் தலை உத்தமன். பிறவி வழுக்கை என்று கெட்டிமேளச் சத்தத்

தையும் மீறி, வந்தவர்கள் ரகசியமாகப் பேசிக் கொண்டார்கள். மணப்பெண்ணோ, நாய்க்குடை போல மாப்பிள்ளையின் முழங்கால் உயரத்துக் குத்தான் இருந்தாள். தாலி கட்டும்போது, மொட்டைத்தலை குனிந்து முழங்காலுக்கு ஒன்றல்ல மூன்று முடிச்சு போடுவதைப் பார்த்தேன். வாழ்க்கையே ஒரு சிக்கலான முடிச்சுதான். அந்த முடிச்சை அவிழ்க்க திருப்பதி ஆண்டவனைத்தான் வேண்டவேண்டும். அது ஏன் வெங்கடாசலபதி என்றால், விளக்கமான பதிலை வெண்பாவில் பார்ப்போம்...

*'முழங்கால் முடிச்சேறி மொட்டையிட்டு*
*மாலை (திருமாலை)*
*தொழுங்கால் தொலையும் துயரம் -*
*பழங்கதையாய்;*
*உன்னில் உறையும் அகங்காரம் ஓய, அவன்*
*முன்னில் அவிழும் முடிச்சு...'*

- **கருப்பம்புலம் சித்திரவேலு,**
**நெய்விளக்கு**

***- அத்தைக்கு மீசை முளைத்தால் சித்தப்பா! சித்திக்கு மீசை முளைத்தால்?***

சித்திக்கு மீசை முளைத்தாலும் சித்தப்பாதான். அந்த சித்தியும், வேறு யாரோ ஒருவருக்கு அத்தையாக இருக்கலாமில்லே! ஒகே.... இதை வேறு விதமாக விளையாடிப் பார்ப்போம். அத்தை மீசை முளைத்து சித்தப்பா ஆகிவிட்டாள். ஆனால், சித்தியின் ஒரிஜினல் புருஷன் சித்தப்பா ஒருவர் இருக்கிறார். ஆக, இப்ப இரண்டு சித்தப்பாக்கள். இந்த அழகில் சித்திக்கு வேறு மீசை முளைத்து விட்டது. மீசை முளைத்த சித்தி, அத்தையாக மாறிய தன் புருஷனுக்குக் கணவனாகலாம்... அதேபோல ஒரிஜினல் அத்தையின் புருஷன், தன் மீசையை எடுத்துவிட்டு, சித்தப்பாவாக மாறிய தன் மனைவிக்குப் பெண்டாட்டியாகலாம்... மீசை சமாசாரத்தை மறந்துட்டுப் பாத்தீங்கன்னா, பழையபடி தம்பதிகள் ஒண்ணா சேந்துட்டாங்க... என்ன... ஒரே தலை கத்தப்பாவா இருக்கா...?






**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
**4343 8888, 2225 1522, 2225 0623, 2225 1324,**

தொலைநகல் :
**044 - 22251021**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 440/-**
**ஆறு மாதம் : ரூ. 220/-**

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



● பாதியில் சரோவர் அணை





● மேதா பட்கர்

# நடக்கும் நர்மதா...
# முடக்கும் மேதா...
# முழிக்கும் குஜராத்..!

## தண்ணீர்ப் பிரச்னை

**1978**ஆம் வருடம் அடிக்கல் நாட்டப்பட்டு, இன்னமும் முழுவதுமாகக் கட்டி முடிக்கப்படாமல் இருக்கும் திட்டங்களில் ஒன்றுதான், நர்மதா ஆற்றின் குறுக்கே கட்டப்படும் சர்தார் சரோவர் அணை. தொடக்கத்திலிருந்தே பல்வேறு தடைகள்; பல நீதிமன்ற வழக்குகள். இந்த அணை மூலம் பெரும் பயனை அடையும் மாநிலம் குஜராத் என்றாலும், மிகக் குறைந்த அளவு பலன் அனுபவிக்கப் போகும் மத்திய பிரதேசமும் மகாராஷ்டிராவும், பூரண ஒத்துழைப்புக் கொடுத்தால் மட்டுமே, திட்டம் முழுமையாக நிறைவேற முடியும். 140 மீட்டர் உயரம் திட்டமிடப்பட்ட அணை, இப்போது 122 மீட்டரிலேயே நிற்கிறது. மீதமுள்ள உயரத்துக்கு மதகுகளைப் பொருத்த கட்டி முடிக்க வேண்டும். அப்படி முடித்தால், குஜராத்தின் பதினெட்டு லட்சம் ஹெக்டேர் நிலம் பாசன வசதி பெறும். ஆயிரக்கணக்கான கிராமங்களில், குடிநீர்ப் பிரச்னை தீரும். அணையின் 214 சதுர கிலோ மீட்டர் நீர்ப் பிடிப்புப் பகுதி மூழ்கும் பெரும்பாலான கிராமங்கள் மத்திய பிரதேசத்தில் இருக்கின்றன. ஆனால் அணையோ, குஜராத்தில் இருக்கிறது. பாதிக்கப்பட்ட மக்களுக்கு மாற்று இடம் கொடுக்கும் மத்திய பிரதேச அரசின் முயற்சிகளுக்குச் சவால்விட்டு நிற்பவர் மேதா பட்கர். மக்களைத் திரட்டி, தெருக்களில் இறங்கிப் போராடுவது மட்டுமல்லாமல், உச்சநீதிமன்றத்தின் கதவையும் தட்டிக் கொண்டிருக்கிறார். மதகுகளைப் பொருத்த முடியாத நிலையில், வெள்ளத்தின்போது, ஏராளமான நீர் கடலில் கலந்து வீணாகிறது; எனவே, முழிக்கிறது குஜராத்.

''குஜராத்தைப் பொறுத்தவரை நீரில் மூழ்கும் கிராமத்து மக்களுக்கு, மாற்று இடம்

கொடுக்கும் பணி பல்லாண்டுகளுக்கு முன்னரே முடிந்துவிட்டது. நர்மதா ஆற்றில் சர்தார் சரோவர் அணைத் திட்டம் என்பது மிகமிகப் பிரம்மாண்டமான திட்டம். திட்ட மதிப்பீடு 35,000 கோடி. இதில் சுமார் 23,700 கோடி செலவு செய்து அணை 122 மீட்டர் வளர்ந்திருக்கிறது. அந்த மட்டத்துக்கு மட்டுமே நீர் தேக்கப்படுகிறது. அணையின் கீழே 1,450 மெகாவாட் உற்பத்தி செய்ய மின் நிலையம் அமைக்கப்பட்டு, அதன் பயனை மத்தியப் பிரதேசம், குஜராத், மகாராஷ்டிரா மாநிலங்கள் அனுபவித்துக்கொண்டிருக்கின்றன. 85,000 கி.மீ. நீளத்துக்குக் கால்வாய்கள் அமைக்கும் பணி பெரும் பகுதி முடிந்துவிட்டது. மின் உற்பத்திக்குப் பயன்படுத்தப்படும் நீர், கால்வாய்கள் மூலம் குஜராத்தின் வறண்ட பகுதிகளான சௌராஷ்டிரா மற்றும் கட்ச் பகுதி மக்களின் தாகத்தைத் தீர்ப்பது மட்டுமல்லாமல், லட்சக்கணக்கான ஏக்கர் நிலமும் பாசன வசதி பெற்றிருக்கிறது. தெற்கு குஜராத்தில் 532 கி.மீட்டருக்குப் போடப்பட்டுள்ள கால்வாய் மூலம் தண்ணீர் செல்வதால் ராஜஸ்தானின் பார்மர் மற்றும் ஜாலோர் மாவட்டங்களிலும் குடிநீர்ப் பிரச்னை இனி இருக்காது. உச்சநீதி மன்றத்தின் அனுமதியை எதிர்பார்த்துக் காத்திருக்கிறோம். கிடைத்தால் முப்பதே மாதங்களில் முழு அளவுப் பணியும் முடிந்துவிடும்.'' என்று சொல்கிறார் செயற்பொறியாளரான அசோக் குஜ்ஜார். கிட்டத்தட்ட முப்பது வருடங்களாக இத்திட்டத்தில் பணி புரிந்து வரும் குஜ்ஜார், ''2,000 கோடியில் அமைக்கப்பட்ட மின் நிலையம் இதுவரை 1,000 கோடிக்கு மின் உற்பத்தி செய்துவிட்டது'' என்று பெருமையுடன் சொல்கிறார்.

**ம**த்திய பிரதேசத்தில் உள்ள அமர்குந்த் என்கிற மலையில் 3,500 அடி உயரத்தில் தனது பயணத்தைத் துவக்குகிறது நர்மதா. 1,314 கி.மீ. ஓடி, குஜராத் மாநிலத்தில் உள்ள பரூச் நகரில், கடலில் கலக்கும் நர்மதாவுக்கு அரண்களாக இருப்பவை விந்தியா மற்றும் சாத்புரா மலைத் தொடர்கள். தனது பயணத்தில் குஜராத் பகுதியில் நர்மதா ஓடுவது 130 கி.மீ.தான். மகாராஷ்டிராவில் 27 கி.மீ.தான். 90 சதவிகித நீர் வீணாகக் கடலில் கலந்து வந்த













நிலையில், நர்மதா நீரை முழுமையாகப் பயன்படுத்தத் திட்டங்கள் தீட்டப்பட்டன. நர்மதா மற்றும் அதனுடன் வந்து கலக்கும் 42 கிளை ஆறுகளில், 30 பெரிய அணைகள் கட்டத் திட்டமிடப்பட்டது. அப்படிக் கட்டப்பட்டு வரும் அணைகளில் பல மத்திய பிரதேசத்தில்தான் அமைந்திருக்கின்றன. சர்தார் சரோவர் மட்டுமே குஜராத்துக்கு. ''நர்மதாவில் நீர் வரத்துக்குப் பிரச்னையே கிடையாது. இப்போது உருவாக்கப்பட்டுள்ள கட்டுமானங்கள் மூலம் வீணாகிக் கொண்டிருந்த நீரில் 60 சதவிகிதத்தைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறோம்'' என்கிறார் குஜ்ஜார்.

சர்தார் சரோவருக்குக் கீழே அமைக்கப்பட்டுள்ள காங்க மின் நிலையம் ஒரு பொறியியல் சாதனை. 60 மீட்டர் உயரம், 23 மீட்டர் அகலம் மற்றும் 210 மீட்டர் நீளத்துக்கு மலை குடையப்பட்டிருக்கிறது. எல்லாமே லேட்டஸ்ட் இயந்திரங்கள். மின் நிலையம் பளிச்சென்று துடைத்துவிட்ட வாசல் போல் இருக்கிறது. அணையில் 110 மீட்டருக்கு மேலே இருக்கும் நீர், மின் உற்பத்திக்குப் பயன்படுத்தப்படுகிறது. மின் நிலையம் குஜராத்தில் இருந்தாலும், உற்பத்தி செய்யப்படும் மின்சாரத்தில் 52 சதவிகிதம் மத்திய பிரதேசமும், 27 சதவிகிதம் மகாராஷ்டிராவும் பெறுகின்றன. 16 சதவிகிதம் மட்டுமே குஜராத்துக்கு. வருடத்தில் இரண்டு மூன்று நாட்கள் முதல்வர் மோடி அணைப் பகுதிக்கு விஸிட் செய்கிறார்.

''**எ**ங்கள் பஞ்ச் மாஹிடி கிராமம், இப்போது நீருக்குள்தான் இருக்கிறது. அதை விட்டு வரும்போது, கண்ணீரோடுதான் வந்தோம். நாங்கள் 1,500 பேர். வீடு கட்டுவதற்கு நிதி உதவி செய்தது மட்டுமல்லாமல் விவசாயத்துக்கும் நிலம் கொடுத்தது அரசு. புதிதாகக் கொடுத்த விவசாய நிலத்தைத் திருத்தியமைத்து, பயிர் செய்வது முதலில் கொஞ்சம் கடினமாகத்தான் இருந்தது. இப்போது சகஜ நிலைக்கு வந்துவிட்டோம். எங்களுக்குக் கொடுத்தது போல் பாதிக்கப்பட்ட எல்லா மக்களுக்கும் வசதிகள் செய்து தர வேண்டும்'' என்கிறார் ககா கிராமத்தைச் சார்ந்த கானுபாய். பாதிக்கப்பட்ட பலருக்கு மாற்று இடம் வழங்கப்பட்டாலும் அதிருப்திக் குரல்

# குஜராத் டுடே Exclusive

கள் எழாமல் இல்லை. ''அலுவலகங்கள் அமைய இடம் கொடுத்த 300 மலை வாழ் குடும்பங்களைச் சேர்ந்தவர்களுக்கு, ஏற்கெனவே நஷ்டஈடு வழங்கப்பட்டுவிட்டது. ஆனால், அரசு எடுத்துக்கொண்ட நிலப் பகுதியை இப்போது டூரிசம் வளர்ச்சித் திட்டத்தில், தனியாருக்கு அதிக விலைக்கு விற்கிறது அரசு. அதற்கேற்ப அவர்களுக்கு இப்போது அதிக நஷ்டஈடு தர வேண்டும்'' என்கிறார்கள் பச்சாவ் அந்தோளன் அமைப்பைச் சேர்ந்த, அப்துல் காதர் மேமனும் மலைவாழ் மக்களின் தலைவரான தினேஷ் பாய் தட்விரும்.

## அடுத்த பிரதமர் மோடியா?

**சோ - சரவெடி**

துக்ளக் பத்திரிகை ஆண்டு விழாவில் கலந்துகொண்டு, தமிழக அரசியல் வட்டாரத்திலும் சிறு சலசலப்பை உண்டு பண்ணியவர் மோடி. அவரைப் பற்றி துக்ளக் ஆசிரியர் 'சோ' நம்மிடம் பகிர்ந்து கொண்டார்...

**பா.ஜ.க.வைச் சேர்ந்த முதலமைச்சர்களில் குஜராத் முதலமைச்சர் நரேந்திர மோடி தவிர் சிறப்புப் பெற்று விளங்குகிறாரே?**

''மற்ற கட்சிகளிலெல்லாம் சிறந்த முதலமைச்சர்கள் ஏராளமானவர்கள் இருப்பது போலவும், பா.ஜ.க.வில் மோடி ஒருவர் மட்டும்தான் சிறந்தவர் போலவும் எண்ணத்தை ஏற்படுத்தும் உங்கள் கேள்வியே தவறு. கடந்த இருபது ஆண்டுகளில், இந்தியாவில் மிகச் சிறந்த வெற்றிகரமான முதலமைச்சர் நரேந்திர மோடிதான். இது காங்கிரஸ், பி.ஜே.பி., கம்யூனிஸ்ட் என... எல்லா கட்சிகளின் ஆட்சிக்கும் பொருந்தும்.''

**2002ஆம் ஆண்டில் நடந்த குஜராத் கலவரத்துக்கு, மோடிதான் காரணம் என்று இன்றும் சொல்லப்படுகிறதே?**

''பொதுவாக எந்த முதலமைச்சரும், தங்கள் மாநிலத்தின் கலவரத்தை அடக்க உடனடியாக ராணுவத்தை அழைக்க முன் வரமாட்டார்கள். ஆனால் கலவரம் தொடங்கியதுமே, தாமதிக்காமல் உடனடியாக ராணுவத்தை வர

● சரோவர் மின் நிலையம்

● காஜு பாய்

நன்றி!






வழைத்தவர் மோடி. எனவே, கலவரத்துக்குக் காரணம் மோடி என்ற குற்றச்சாட்டை நான் ஏற்றுக்கொள்ளமாட்டேன். அவர் கலவரத்தைக் கட்டுப்படுத்த உடனடி நடவடிக்கை எடுத்தார் என்பதுதான் சரி.''

**குஜராத் பயணத்தின்போது, கலவரத்தால் முஸ்லிம்களின் மனம் ரணப்பட்டிருப்பது தெரிந்தது. அந்த ரணத்துக்கு நிவாரணமாக மோடி என்ன செய்ய வேண்டும்?**

'நீங்கள் யாரைச் சந்தித்தீர்கள் என்று எனக்குத் தெரியாது. ஆனால், முஸ்லிம்களும் மோடிக்கு ஆதரவாக வாக்களித்திருக்கிறார்கள். கலவரத்துக்குப் பிறகு, நடந்த உள்ளாட்சித் தேர்தலின்போது, முஸ்லிம்கள் பகுதிகளில் பி.ஜே.பி. வெற்றி பெற்றுள்ளது. மோடியை மதித்து, 'முல்லா மோடி' என்று குறிப்பிடும் முஸ்லிம்களும் அங்கே இருக்கிறார்கள்.''



**கலவரத்தினால் நேரடியாகப் பாதிக்கப்பட்ட முஸ்லிம்களை நாங்கள் சந்தித்துப் பேசினோம். அவர்கள் மனத்தில் இன்னமும் ரணம் ஆறவில்லை என்பதை உறுதியாகச் சொல்ல முடியும்?**

'இருக்கலாம். அதற்கு மோடியை எப்படிக் குற்றம் சொல்லலாம்? அவர், காரணம் வேறு

## "எதிர்காலத்தில் மோடி இந்தியப் பிரதமராவது நிச்சயம்"



படுத்திப் பார்ப்பதில்லை. அக்ஷர் ஆண்டு விழா முடிந்தவுடன், பல முஸ்லிம்கள் என்னிடம் வந்து, 'மோடியைப் பற்றி, இத்தனை நாட்கள் நாங்கள் தவறாக நினைத்துக்கொண்டிருந்தோம். அவரைச் சரியாகப் புரிந்து கொள்ள, ஒரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தீர்கள்' என்று நன்றி தெரிவித்தார்கள்.''

**எதிர்காலத்தில் அகில இந்திய அரசியலில், மோடியின் பங்கு எப்படி இருக்கும்?**

''அவர் குஜராத்தில் செய்ய வேண்டிய பணிகள் நிறைய இருக்கின்றன. அதன் பிறகு, நிச்சயம் தேசிய அரசியலில் அவர் முக்கியத்துவம் பெறுவார். உடனடியாக இல்லாது போனாலும், **எதிர்காலத்தில் மோடி இந்தியப் பிரதமராவது நிச்சயம்.**''





# அசத்தும் அதிரடி ஐ.ஏ.எஸ்.கள்!

## தமிழர்களின் தனிப்பெருமை!

மகாராஷ்டிராவிலிருந்து பிரிந்து, குஜராத் தனி மாநிலமாக உருவான நாளிலேயே, அதன் தலைமைச் செயலாளராகப் பணியாற்றியவர் ஒரு தமிழர்தான்; பெயர் ஈஸ்வரன். குஜராத்தின் முதல் முதலமைச்சர் ஜீவராஜ் மேத்தாவுக்குச் செயலாளராகப் பணியாற்றிய ஐ.ஏ.எஸ். அதிகாரி சந்திரமௌலியும் தமிழ் நாட்டுக்காரர்தான். அதன் பிறகு, சிவஞானம், பாலகிருஷ்ணன், ஜெயராமன், ராமகிருஷ்ணன், ராமமூர்த்தி, கிருஷ்ணமூர்த்தி, ஹரிஹரதாஸ் என்ற வரிசையில் தற்போது தலைமைச் செயலாளராக இருக்கும் மஞ்சுளா சுப்ரமணியமும் தமிழர்தான். இவர் குஜராத்தில் தலைமைச் செயலாளராகப் பணியாற்றும் முதல் பெண்மணி.

சென்னை லயோலா கல்லூரி மாணவரான எஸ்.ஜெ.குயேலோ, குஜராத்தின் தொழில் துறைச் செயலாளராக மாநிலத்தின் தொழில் வளர்ச்சிக்கு அடித்தளமிட்டவர். 1962ஆம் வருட ஐ.ஏ.எஸ். பேட்ச்சைச் சேர்ந்த சுந்தரம், தமது பணிக்காலத்தில் குஜராத்தில் மட்டுமின்றி, அமுல் கூட்டுறவு நிறுவனம் சம்பந்தப்பட்ட பணிகளைக் கவனிக்க பெல்ஜியத்திலும் பணியாற்றினார். அவர் மத்திய அரசின் சுற்றுலாத்துறையில் பணியாற்றி ஓய்வு பெற்றதை அடுத்து, குஜராத் மாநில அரசு, அவரை சுற்றுலா துறை வளர்ச்சி ஆலோசகராக நியமித்தது.

பொதுவாக குஜராத்திகள் வியாபார ஆர்வமுள்ளவர்கள் என்பதால் ஐ.ஏ.எஸ். பணிக்கு வருவது குறைவு. ஆனால், தென்னிந்தியாவிலிருந்து குறிப்பாக, தமிழ் நாட்டிலிருந்து அந்தக் காலத்தில் ஐ.ஏ.எஸ். தேர்வு பெறுபவர்கள் எண்ணிக்கை அதிகமாக இருக்கும். எனவே, குஜராத்தில் ஆண்டுதோறும் பணி நியமனமாகும் ஐ.ஏ.எஸ். அதிகாரிகளில், சுமார் மூன்றில் ஒரு பகுதியினர் தமிழ்நாட்டுக்காரர்களாகத்தான் இருப்பார்களாம்.







நன்றி!

# குஜராத் டுடே

*Exclusive*

அரசு உயர் அதிகாரிகள், ஆட்சியாளர்களுடன் தனிப்பட்ட முறையில் நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்வதோ, ஆட்சியில் இருப்பவர்கள் அதிகாரிகளை, தங்கள் இஷ்டத்துக்குப் பந்தாடுவதோ குஜராத்தில் இல்லை என்று சொல்லலாம். இதுவும், மாநிலத்தின் வளர்ச்சிக்கு முக்கியமான காரணங்களுள் ஒன்று'' என்கின்றனர் அதிகாரிகள்.

தற்போது குஜராத்தில் பணியாற்றும் தமிழ் ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் மிகுந்த திறமைசாலிகள் என்று பெயர் பெற்றிருக்கிறார்கள். தொழில் துறைச் செயலாளராக இருக்கும் ராஜகோபாலன் குஜராத் ஸ்டேட் பெட்ரோலியம் கார்ப்பரேஷன் நிறுவனத்தின் சேர்மனும்கூட. இந்த நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் ஜகதீச பாண்டியனும் ஒரு தமிழர்தான். முதலமைச்சர் அலுவலகத்தில் பணியாற்றும் மூத்த அதிகாரி கைலாசநாதன், குஜராத் பேரழிவு மேலாண்மை நிர்வாக ஆணையத்தின் இணை செயல் அதிகாரியாக இருந்த வெ.திருப்புகழ், லண்டன் ஹை கமிஷனர் அலுவலகத்தில் இருக்கும் ஜகதீசன், அகமதாபாத் முனிசிபல் துணை கமிஷனர் தாரா, கபர்காந்தா மாவட்ட கலெக்டர் தென்னரசன் என்று பட்டியல் நீளுகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக, குஜராத்தின் அதிரடி ஐ.ஏ.எஸ். தமிழரை வைத்து எடுத்த ஒரு குஜராத்தி சினிமா சக்கைப்போடு போட்டிருக்கிறது.

*குஜராத் பயணம்,*

*பார்வை, படைப்பு :*

**ப்ரியன், எஸ்.சந்திரமௌலி**

*(பயணம் தொடரும்)*





## ஸ்பீட் போஸ்டுக்கு சி.டி. பரிசு!

விரைந்து வரும் 'குஜராத் டுடே'
பற்றிய முதல் இரண்டு விமர்சனங்களுக்கு,
துக்ளக் ஆண்டு விழாவில் மோடி ஆற்றிய
உரையின் சி.டி. பரிசு!
சென்ற வார குஜராத் டுடே குறித்த
விமர்சனங்களுக்கு சி.டி. பரிசு பெறுவோர் :
**உம்மெ ஹாலா, வாணியம்பாடி**
**அ.ரா.வலம்புரிநாகராஜன், ஈரோடு**

# ஆறு வார அதிரடி!

# பட்டுப் புடவை பரிசுத் திட்டம்!

'குஜராத் டுடே' பக்கங்களில் அடங்கியுள்ள ஒரு முக்கியமான பெயரைக் கண்டுபிடித்து எழுத, அருகிலுள்ள கட்டங்களை நிரப்புங்கள். வட்டமிட்ட எழுத்துகளை வரிசைப்படுத்தி, கடைசி கட்டங்களை நிரப்புங்கள். கூப்பனையும் நிரப்பி, **'ஆறு வார அதிரடி - 4' கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032 என்ற முகவரிக்கு 9.4.08க்கு முன்னதாகக் கிடைக்கும்படி** அனுப்புங்கள். சரியான விடையை எழுதும் ஒரு வாசகருக்கு, **பாலம் சில்க்ஸ் வழங்கும் பட்டுப் புடவை பரிசு!** ஒன்றுக்கு மேற்பட்ட வாசகர்கள் சரியாக எழுதினால், குலுக்கல் முறைதான்! ஆசிரியர் தீர்ப்பே இறுதி! போட்டி-1 மற்றும் 2-ன் முடிவுகள் 69ஆம் பக்கம்.

'ஆறு வார அதிரடி - 4'

பெயர் : ..............................................

வயது : ..............

முகவரி: ..............................................

..............................................

..............................................

..............................................

கல்கியில் விரும்புவது : ......................

..............................................

# கல்கி - பாலம் சில்க்ஸ் வழங்கும் போட்டி-4

1. அரசின் முயற்சிகளுக்கு சவால்விடும் பெண்மணி

| | | | | | ◯ |
|---|---|---|---|---|---|

2. ''உங்கள் கேள்வியே தவறு'' என்று சொல்பவர்

| ◯ |
|---|

3. '......... குழாயிலேயே தண்ணீர் கிடைக்கிறது'

| | | | ◯ |
|---|---|---|---|

4. இந்த மலையில் துவங்குகிறது நர்மதாவின் பயணம்

| ◯ | | | ◯ | | |
|---|---|---|---|---|---|

5. 'பார்மர் மற்றும்............ மாவட்டங்களில் குடிநீர் பிரச்னை இருக்காது'

| ◯ | | |
|---|---|---|

6. நினைவில் நீங்காத நிலநடுக்கம் ஏற்பட்ட பகுதி

| | ◯ |
|---|---|

பெருமைப்படும் செயற்பொறியாளர்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|

# சரப்ஜித்சிங் மனைவிக்கு சல்யூட்

"தனிமனிதரைவிட நாடுதான் முக்கியம். இங்குள்ள பயங்கரவாதிகளை விடுவித்துதான் என் கணவரைக் காப்பாற்ற முடியும் என்ற சூழ்நிலை வருமெனில், என் கணவருக்கு அத்தகைய விடுதலை தேவையில்லை" என்று சொன்ன சரப்ஜித் சிங் மனைவி, சுக்பிரீத் கவுருக்கு, இந்தியத் தாயே 'சல்யூட்' வைத்திருக்கிறாள்.

அமைச்சரின் மகளைக் காப்பாற்ற, தீவிரவாதிகளை விடுவித்த இதே நாட்டில் ஒரு சாதாரணப் பெண்மணி புதிய சரித்திரம் எழுதியிருக்கிறார். அவருக்கு நாமும் சல்யூட் வைப்போம். உள்ளத்தால்... வார்த்தைகளால்... சல்யூட் வைப்போம்.

கீழே உள்ள பெட்டியில் அடங்கும் வகையில் நாலு வரிகளில் சிறப்பான வார்த்தைகளால் அவருக்கு பாராட்டைத் தெரிவியுங்கள். தேர்ந்தெடுக்கப்படும் 'சல்யூட் வார்த்தைகள்' கல்கியில் உங்கள் பெயருடன் இடம்பெறும். கடைசி தேதி : 06.04.2008

சல்யூட் சுக்பிரீத்கவுர்!

பெயர் : ..............................

முகவரி: ..............................

..............................

..............................

..............................



# கல்கி




2008 ஏப்ரல் 6
சர்வஜித் பங்குனி 24
மலர் : 66
இதழ் : 36


தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா

— *பாரதியார்*

## ஊதிய கமிஷனும் ஊதாரிச் செலவுகளும்!

நல்லெண்ணெய் விலை கடந்த நான்கே மாதங்களில் நூறு சதவிகிதத்துக்கும் அதிகமாக உயர்ந்திருப்பது மட்டுமல்ல, அத்தியாவசியப் பொருட்கள் பெரும்பாலானவை கிடுகிடுவென விலை உயர்வு கண்டுள்ளன. இதனை அனைவரும் ஒப்புக்கொண்டு, காரணங்களை ஆராய்ந்து வரும் வேளையில், மத்திய அரசு செய்துள்ள காரியம் தரக்குறைவான எண்ணெய்போல் கசப்பூட்டுகிறது!

2008-09க்கான பட்ஜெட்டில் ரூ.1,33,287 கோடி நிதிப் பற்றாக்குறை காட்டப்பட்டிருப்பது நம் எல்லோருக்கும் தெரியும். ஆனால், பற்றாக்குறையை நேர்மையாகக் கணக்கிட்டு உண்மையைக் கூறாமல், சில முக்கியமான செலவுகளை மறைத்தும் மழுப்பியும் பற்றாக்குறை தொகையைக் குறைத்துக் காட்டியிருக்கிறது பட்ஜெட் அறிக்கை. இந்த அதிர்ச்சி தரும் உண்மையைப் பொருளாதார ஆய்வாளர்கள், வல்லுனர்கள் சுட்டிக்காட்டியிருக்கிறார்கள்.

உதாரணமாக, பெட்ரோலியப் பொருட்கள், உணவு, இரசாயன உரம் போன்றவற்றுக்கான மானியத் தொகையைச் செலவு கணக்கில் கொண்டுவராமல், அத்தொகைக்குப் புதிய கடன் பத்திரங்கள் வழங்கி நிதி சேர்க்க முற்பட்டுள்ளார் நிதியமைச்சர். இந்தப் பத்திரங்களுக்கான வட்டியும் அசலும் திருப்பித்தரப்படவேண்டிய கடன் செலவுகள் தானே! இவ்வுண்மை மறைக்கப்படாவிட்டாலும் மழுப்பப்பட்டிருக்கிறது.

இதுபோன்ற மழுப்பி மெழுகப்பட்ட செலவுகளே ஒரு லட்சம் கோடிக்கு இருக்கும் என்பது நிபுணர்களின் மதிப்பீடு.




9,996 கோடி ரூபாய்க்கு ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா சிறப்புப் பங்குகளை வாங்கும் உரிமையை மத்திய அரசு பெற்றிருந்தபோதிலும், வாங்குவதற்கு அதனிடம் பணமில்லை. ஆகவே, அதற்கும் கடன் பத்திரங்கள் வழங்கி, அதை மக்களிடம் விற்றுக்கொள்ளுமாறு கூறிவிட்டது அரசு! இந்தத் தொகையும் அதற்கான வட்டியும் பட்ஜெட்டில் செலவு கணக்கில் காட்டப்படவில்லை.

இவற்றையெல்லாம்விட அநீதி, ஆறாவது ஊதிய கமிஷனின் அறிக்கை வரவிருப்பது தெரிந்தும், அதனால் ஏற்படக்கூடிய கூடுதல் செலவுக்கு நிதியமைச்சர் நயா பைசா ஒதுக்கவில்லை என்பதே! விவசாயக் கடன் தள்ளுபடி போலவே இந்தச் செலவும் எவ்வாறு சமாளிக்கப்படும் என்பது பற்றி எந்தச் சிந்தனையும் இல்லை. ஆறாவது ஊதிய கமிஷனுடைய பரிந்துரைகளால் அரசுக்கு (பழைய பாக்கிக்கான) உடனடி கூடுதல் செலவு 18,060 கோடி என்பதோடு, ஆண்டுதோறும் 12,561 கோடி ரூபாய் கூடுதல் செலவு தொடரும்! விலைவாசி உயர்வைச் சமாளிக்க மத்திய அரசு ஊழியர்களின் ஊதியம் உயர்த்தப்படுவது நியாயமே. ஆனால், அந்தச் செலவுக்கு அரசு திட்டமிடாததை ஏற்கவும் முடியாது; பட்ஜெட்டில் சேர்க்காததை மன்னிக்கவும் முடியாது!

நிகர விளைவாக, இந்த ஊதிய கமிஷன் பரிந்துரைகள் அமலாகும்போது, நல்லெண்ணெய் விலை மேலும் நூறு சதம் உயர்ந்தாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை. ஏனெனில், நாற்பது லட்சம் மத்திய அரசு ஊழியர்களுக்கும் அதன் நிழல் தொடர்ச்சியாகப் பல்வேறு மாநில அரசு ஊழியர்களுக்கும் ஊதியம் கிடுகிடுவென்று உயர்கிறபோது, பணப்புழக்கமும் விறுவிறுவென்று அதிகரிக்கும். அதற்கேற்ப உற்பத்திப் பெருக்கம் நாட்டில் இல்லாததால் விலைவாசி மீண்டும் உயரவே செய்யும்! இந்த விஷ வட்டத்திலிருந்து விடுபட, வேலை வாய்ப்பையும் உற்பத்தியையும் பெருக்கும் திட்டச் செலவினங்களை அதிகரித்து, கிராமப்புறங்களைத் தன்னிறைவு நோக்கி திசை திருப்பி, வருவாய் தராத செலவுகளைக் குறைப்பது ஒன்றே வழி. அரசின் விண்ணளாவிய டம்பாச்சாரி செலவினங்களை அதிரடியாகக் குறைக்க வேண்டும். இதைச் செய்யும் துணிவு என்றைக்கு இந்திய நிதியமைச்சருக்கு ஏற்படுகிறதோ, அன்றுதான் இந்தியப் பொருளாதாரத்துக்கு விடிவுகாலம்! ●

தேரழுந்தூர் காவிரிக் கரையில் உள்ள ஊர். திருமங்கையாழ்வார், இவ்வூரில் நின்றிருக்கும் பெருமானை ஏத்தி 45 அழகான பாடல்கள் பாடியிருக்கிறார். அவற்றில் ஒன்றை மாதிரிக்காகப் பார்க்கலாமா?

இந்தப் பாடலில் கஜேந்திர மோட்சம் சொல்லப்பட்டிருக்கிறது.

***குலத் தலைய மதவேழம் பொய்கை புக்கு,***
***கோள் முதலை பிடிக்க, அதற்கு அனுங்கி நின்று,***
***நிலத் திகழும் மலர்ச் சுடர் ஏய் சோதீ! என்ன,***
***நெஞ்சு இடர் தீர்த்தருளிய என் நிமலன் காண்மின் -***
***மலைத் திகழ் சந்து, அகில், கனகம், மணியும் கொண்டு***
***வந்து உந்தி, வயல்கள்தொறும் மடைகள் பாய,***
***அலைத்து வரும் பொன்னி வளம் பெருகும் செல்வத்து***
***அணி அழுந்தூர் நின்று, உகந்த அமரர் கோவே.***

'நல்ல இடத்தில் பிறந்து (குலத்தலைய) அலைகிற யானை, பொய்கையில் புகுந்த போது, கொடிய (கோள்) முதலை அதனைப் பிடித்துக்கொள்ள, பயந்துபோய் (அனுங்கி), நிலவைப்போல் ஒளிரும் சோதியே! என்று கதற, அதன் கஷ்டத்தைத் தீர்த்தருளிய பரிசுத்தமானவனைக் (நிமலன்) காணுங்கள். மலையிலிருந்து வரும் சந்தனமும் அகிலும் பொன்னும் மணியும் கொண்டுவந்து தள்ள, மடைகள் எல்லாம் பாயும் காவிரியின் வளம் பெருகும் திருவழுந்தூரில் காட்சி தரும் பெருமானே! தேவர்களுக்கு அதிபதியே.'

ஆழ்வார் காலத்தில் காவிரி நதியில் சந்தனமும் அகிலும் பொன்னும் மணியும் பாய்ந்திருக்கின்றன. இப்போது குப்பைகளுக்கும் தண்ணீர்ப் பாம்புகளுக்கும் பயந்து குளிக்காமல் வருகிறோம். திவ்யப் பிரபந்தத்தில், பெரிய திருமொழி ஏழாம் திருமொழி எட்டாம் பத்தில் உள்ள இந்தப் பாடல்களில் மகாவிஷ்ணுவின் மற்ற அவதாரங்களையும் ஒவ்வொரு பாசுரமாகப் பாடியிருக்கிறார்.

குதிரை முக அயக்ரீவ அவதாரம், சிங்கமுக நரசிம்மாவதாரம், கிருஷ்ணா வதாரம், வாமனாவதாரம், இராமாவதாரம். பன்றியாய் மீன் ஆகி அரி ஆய் பாரைப் படைத்துக் காத்து உண்டு உமிழ்ந்த பரமன், தன் எல்லா அவதாரங்களையும் பாடுகிறார். அற்புதமான பாசுரங்கள்!

(நிறைந்தது)

# ஒரு காலத்தில் காவிரி!

16
பாகம் 2
வாரம் ஒரு பாசுரம்
சுஜாதா

## எச்ஐவியுடன் வாழ்வோரை



# ஒதுக்குதல் புண்படுத்தும்

திருமதி. நளினி வில்சன்
தலைமை ஆசிரியர்



**ஏன் இந்த ஒதுக்குதல்?**

"எச்ஐவி இருக்குற குழந்தைங்க கூட... நம்ம குழந்தைங்க விளையாடுறதாலோ, சாப்பிடுறதாலோ, பழகுறதாலோ... எச்ஐவி பரவாது. அப்படி இருக்கிறப்போ ஏன் இது? குழந்தைங்களுக்கு வழிகாட்டுற டீச்சர்சும், பேரண்ட்சும் ஆன நாம இத புரிஞ்சுக்கலாமே!"

**ஒதுக்குதல் புண்படுத்தும்.**



சென்னையில் வாழும் 25 வயது இளைஞன், காலை பத்தரை மணிக்கு என்ன செய்யலாம்? ஒரு மார்க்கெட்டிங் எக்ஸிக்யூட்டிவாக மூச்சாப் போக நேர மின்றி, தெருத் தெருவாக பைக்கில் சுற்றிக் கொண்டிருக்கலாம். அல்லது ஒரு சாஃப்ட் வேர் கம்பெனியில், கம்ப்யூட்டரில் தட்டிக்கொண்டிருக்கலாம்.

அதற்கெல்லாம் ஜாதகத்தில் எழுதி யிருக்க வேண்டும். என்னை சனி பகவான் ரவுண்டு கட்டி, நீசப்பார்வை பார்த்துக் கொண்டிருப்பதால், வாய்த்தது வேலை கிடைக்காத வாழ்க்கைதான்.

ஆகையால் காலை பத்தரை மணிக்கு, நான் அரசு கிளை நூலகத்தில் இருந்தேன். நான்கைந்து பேர் மட்டும் அமைதியாகப் படித்துக்கொண்டிருந்தனர்.

நான் அரைமணி நேரமாக, அந்தக் கதர் சட்டைப் பெரியவர் படித்துக்கொண்டிருக் கும் ஹிண்டு பேப்பருக்காகக் காத்துக் கொண்டிருக்கிறேன். அவர் பேப்பரைக் கீழே வைப்பதாகத் தெரியவில்லை.

மாலையிலும் இதே நிலைதான். நானும் நாகரிகம் கருதி, இத்தனை நாட்களாகக் கேட்காமல் இருந்தேன். இன்று கேட்டுவிட வேண்டியதுதான் என்ற முடிவோடு, ''சார், அந்த உள் பேப்பரைத் தர்றீங்களா?'' என்றேன்.

''நான் படிக்கணும்'' என்றார் பெரியவர்

# பேப்பர் தாத்தா

முகத்தைக் கடுகடுப்பாக வைத்துக்கொண்டு.

''இது பப்ளிக் லைப்ரரி. நாலு பேரு படிக்க வேண்டாமா? மொத்த பேப்பரை யும் நீங்களே தூக்கி வைச்சுக் கிட் டிருந்தா...''

''வேற பேப்பர் படிங்களேன். நான் ஹிண்டு பேப்பர் மட்டும்தான் படிக் கறேன்.''

''நீங்கதான் லைப்ரரி முடியற வரைக் கும் ஹிண்டுவையே படிச்சிட்டிருக்கிங் களே...''

''வேணும்னா, நீங்க சீக்கிரம் வந்து எடுத்துப் படிங்க..''

''வயசான காலத்துல, நம்ம உயிர எடுக் கன்னே வந்து சேருதுங்க'' என்று முணு முணுத்துக்கொண்டே வெளியே வந்தேன்.

மறுநாள் காலை. சீக்கிரமாக, எட்டே கால் மணிக்கே வேகவேகமாக லைப்ர ரிக்கு வந்தேன். பெரியவர் அதற்கு முன்பே வந்து, ஹிண்டு பேப்பரோடு உட்கார்ந் திருந்தார். என்னைப் பார்த்ததும் அழுக்க மாகச் சிரித்தபடி, சப்ளிமெண்ட்டை தொடைக்குக் கீழே வைத்துக்கொண்டார்.

நான் எரிச்சலுடன், வேறொரு பேப் பரை எடுத்துக்கொண்டு அமர்ந்தேன். சில நிமிடங்கள் கழித்து அவரைக் கவ னித்தேன்.

மிகவும் தீவிரமாக, பரீட்சைக்குப் படிப் பது போல், கண்களுக்கு நெருக்கமாக வைத்துப் படித்துக்கொண்டிருந்தார். இடை யிடையே ஏதோ முனகினார். திடீரென்று சத்தமாக, ''தி பட்ஜெட் செஷன் ஆஃப் தி பார்லிமென்ட்....'' என்று உரக்க படித்தார். இன்று ஒருமுறை கேட்டுப் பார்க்கலாமா என்று நினைத்தேன். எதற்குக் கேட்டு, அவமானப்பட வேண்டும்? நாளைக்குப் பார்த்துக்கொள்ளலாம் என்று கிளம்பினேன்.

அடுத்த நாள் காலை, சரியாக எட்டு மணிக்கே, லைப்ரரி சென்றுவிட்டேன். லைப்ரரி இன்னும் திறக்கவில்லை. அப் பாடா! இன்று ஹிண்டுவைப் பிடித்துவிட லாம் என்று நினைத்தபோதுதான் கவனித்தேன். பெரியவர், சற்றுத் தள்ளியிருந்த குட்டைச்சுவரில் அமர்ந்தபடி, ஹிண்டுவைப் படித் துக்கொண்டிருந்தார்.

எனக்குப் பகீரென்றது. இவ் வளவு ஆர்வமாகப் படிப்பவர், பேசாமல் காசு கொடுத்து வாங்கிப் படிக்கவேண்டியதுதானே.

லைப்ரரி திறந்தவுடன், உள்ளே போய் அமர்ந்து கொண்டார். லைப்ரரியன் கூட, அவர் இருக்குமிடத்திற்கே வந்து, ஹிண்டுவை வாங்கி, சீல் போட்டுக் கொடுத்துவிட்டுச் சென்றார்.

இன்று மீண்டும் கேட்டுத் தராவிட் டால், லைப்ரரியனிடம் நியாயம் கேட்பது என்ற முடிவோடு, ''சார், உன் பேப்பர் மட்டும் தந்தீங்கன்னா, அரைமணி நேரத் துல தந்துடறேன்'' என்றேன்.

''நான் படிக்கணும் தம்பி..'' என்று கூறிவிட்டு, அந்தப் பக்கம் திரும்பிக் கொண்டார். நான் கோபமாக, ''என்ன சார் இது அநியாயமா இருக்கு...'' என்றபடி வேகமாக லைப்ரரியன் அறையை நோக் கிச் சென்றேன். என்னைப் பார்த்தவுடன், ''என்ன தம்பி?'' என்றார்.

''சார்... இந்தப் பெரியவர்கூட, ஒரே ரோதனையாப் போச்சு'' என்று சொல்ல,

ஜி.ஆர்.சுரேந்திரநாத்



**ஹிண்டு பேப்பரையே வெறிக்கப் பார்த்த பெரியவர் விறுவிறுவென்று வெளியேறினார்.**

''எந்தப் பெரியவர்?''

''ஹிண்டு பேப்பரை யாருக்கும் தராம படிக்கறாரே...''

''ஓ! பேப்பர் தாத்தாவா...? அவர் படிச்சு முடிச்சவுடனே படிங்களேன்.''

''எங்க சார்... லைப்ரரி முடியற வரைக்கும், ஹிண்டுவத்தான் படிச்சுட்டிருக்காரு. நீங்க கொஞ்சம் சொல்லி, வாங்கித் தாங்க சார்.''

''என்னப்பா இது...'' என்று அலுத்துக்கொண்டே எழுந்தார்.

பெரியவரின் அருகில் வந்து, ''என்ன பெரியவரே... ஹிண்டு பேப்பரை, யாருக்கும் தரமாட்டேன்ங்கிறீங்களாமே... பப்ளிக் லைப்ரரி. நாலு பேரு படிக்க வேண்டாமா?'' என்றார்.

''ஹிண்டு பேப்பரை, அவ்வளவு சீக்கிரமா படிக்க முடியுமா? நீங்களே சொல்லுங்க சார்'' என்று பெரியவர் பரிதாபமாகக் கூற, ''பெரியவர்தான் படிச்சுட்டுத் தரட்டுமே'' என்றார் லைப்ரரியன்.

''சை...'' என்று வெறுப்புடன் நான் லைப்ரரியை விட்டு வெளியே வந்தேன்.

இப்போது ஹிண்டு பேப்பரைப் படிப்பதைவிட, பெரியவரிடம் தோற்றுப்போவதுதான் பெரிய பிரச்னையாகத் தெரிந்தது.

**அ**ன்று புதன்கிழமை. பெரியவர் வழக்கம்போல், ஹிண்டுவில் மும்முரமாக இருந்தார். என்னைப் போல் லைப்ரரிக்கு ரெகுலராக வரும் மற்றவர்கள், ஹிண்டு பேப்பர் பெரியவருக்கு மட்டும்தான் என்பதை மனத்தளவில் ஏற்றுக்கொண்டுவிட்டது போல் தெரிந்தது.

ஆஸ்திரேலியாவில், இந்தியா ஜெயித்தது பற்றிப் படிப்பதற்காக, ''சார்... கொஞ்சம் ஸ்போர்ட்ஸ் பேஜ்ஜாச்சும் தாங்க...'' என்றேன் பணிவுடன்.

''என்ன தம்பி... ஒருத்தன் படிச்சுக்கிட்டிருக்கான். கொஞ்சம்கூட நாகரிகமே இல்லாம, நடுவுல கேக்கறீங்களே...'' என்று அவர் கூறியவுடன் எனக்குக் கோபம் வந்துவிட்டது.

''யோவ்... விளையாடறியா நீ..'' என்று கோபமாகக் கத்தினேன்.

''தம்பி, கொஞ்சம் மரியாதையா பேசுங்க...'' என்று பெரியவர் கூறியவுடன், எனக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்த கண்ணாடிக்காரர் எனக்கு ஆதரவாக, ''என்னய்யா மரியாதை உனக்கு. நானும் தினமும் பாத்துக்கிட்டிருக்கேன். ஹிண்டு பேப்பர் என்னமோ, உன் வீட்டுச் சொத்து மாதிரி, எவனுக்கும் தர்றதில்ல...'' என்று கூறியவுடன், மேலும் பலர் சேர்ந்து கொண்டனர்.

இவ்வளவு தகராறுக்கும், அவர் கொஞ்சமும் அசராமல், ஹிண்டுவை இறுக்கமாகக் கையில் பிடித்தபடி ''திஸ் இஸ் நாட் ஃபேர்'' என்று மட்டும் மீண்டும் மீண்டும் கூறிக்கொண்டிருந்தார்.

"என்னய்யா ஃபேர், நீ என்னமோ காசு கொடுத்து வாங்குன மாதிரி பேசிக்கிட்டிருக்க... கொடு பேப்பர..." என்று கண்ணாடிக்காரர், அவரிடமிருந்து பேப்பரைப் பிடுங்க முயற்சி செய்தார்.

"என்ன... இப்படி அராஜகமா பிகேவ் பண்றீங்க..." என்று சொன்ன பெரியவர் நழுவிய வேட்டியைச் சரி செய்வதற்காக பேப்பரை மேஜை மேல் வைத்தார். நான் அவருக்குப் பின்னால் நின்றபடி, பேப்பரை எடுப்பதற்காகக் கையை நீட்டினேன். பெரியவர் அதைக் கவனித்துவிட்டு, வேகமாகக் குறுக்கே பாய... எனது கை வேகமாக அவர் முகத்தில் இடித்துவிட்டது. "அம்மா..." என்று கன்னத்தைப் பிடித்துக்கொண்டு, சுருண்டு கீழே அமர்ந்தார். இதை யாரும் எதிர்பார்க்கவில்லை.

நான் பதற்றத்துடன், "சார்..." என்று அவருடைய கையைப் பிடித்தேன். அவர் வாயிலிருந்து, ரத்தம் எட்டிப் பார்க்க... எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"சார் வேணும்னு அடிக்கல சார்" என்ற எனது பேச்சைக் கவனிக்காமல், பெரியவர் சட்டென்று அழ ஆரம்பித்துவிட்டார்.

மற்றவர்கள் குற்ற உணர்வில் பேச்சிழந்து நிற்க, ஒரு நாமக்காரர் மட்டும், "பெரியவருதான் குழந்தை மாதிரி நடந்துகிட்டாருன்னா... நீங்களும் குழந்தை மாதிரி நடந்துக்கறீங்க..." என்றபடி, பெரியவர் தாறுமாறாகக் கட்டியிருந்த வேட்டியை, சரியாகக் கட்டிவிட்டார்.

பெரியவர், ஹிண்டு பேப்பரையே சில விநாடிகள் உற்றுப் பார்த்தவர், விறுவிறுவென்று வேகமாக வெளியே நடக்க நான் சிறிது தூரம், "சாரி சார்" என்றபடி பின்னாலேயே சென்றேன். அவர் மறையும் வரை பார்த்துக்கொண்டே நின்றேன்.

மீண்டும் லைப்ரரி செல்ல பிடிக்காமல் வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தேன். "தம்பி..." என்று குரல் கேட்டுத் திரும்பினேன். நாமக்காரர்.

என்னருகில் வந்த நாமக்காரர், "கொஞ்சம் அவசரப்பட்டுட்டீங்க தம்பி.." என்றார்.

"வேணும்னு பண்ணல சார்.."

"தெரியும் தம்பி. அவரு பண்றதும் சரியில்லதான். அன்னைக்கு லைப்ரரியன் வந்து விசாரிச்சப்ப என்கிட்ட சொன்னாரு. அறுபது வருஷமா, தினமும் தவறாம ஹிண்டு படிச்சுக்கிட்டிருக்காராம். மகன் கூட இருக்காரு. மருமக முகடு புடிச்சவளாம். போன மாசம், இவருகூட ஏதோ சண்டை.. அதை மனசுல வச்சுக்கிட்டு, எதுக்கு தண்டச் செலவுன்னு புருஷன்கிட்ட சொல்லி, பேப்பரை நிறுத்திட்டாளாம். பாவம்..." என்றார்.

**ம**றுநாள் பெரியவர் வந்தால் கொடுப்பதற்காக, நாங்கள் யாரும் ஹிண்டுவைத் தொடாமல், டேபிளிலேயே போட்டு வைத்திருந்தோம். ஆனால், அதன் பிறகு அவர் லைப்ரரிக்கு வரவே இல்லை.



## தூறல் கவிதை...

தங்க வளையலில்
கண்ணீர் முத்துக்கள்
அடகு வைக்கையில்

-தஞ்சை தாமு



''மன்னா, அண்டை நாட்டு அரசனிடம் கஜானா காலின்னு இனிமேல் கப்பம் கட்டாமல் மொற்ற முடியாது.''

''தளபதி என்ன சொல்கிறீர்?''

''கப்பம் கட்ட வங்கி லோன் ஏற்பாடு பண்ணியிருக்கிறார்.''

- எம்.அசோக்ராஜா

# இடிச்சிரிப்பு மன்னன்



''அரசே! ஜனங்க கிளம்பிட்டாங்க!''

''எங்கே, அமைச்சரே?''

''நகர்வலம் வரும் குரங்குகளிடமிருந்து தப்பிக்க காட்டுக்குக் கிளம்பிட்டாங்க!''

- அ.சுஹைல்ரஹ்மான்

''மன்னா! நகர்வலம் செல்வதை நிறுத்திக் கொள்ளுங்கள்!''

''ஏன் மந்திரியாரே?''

''அரண்மனை வைத்தியர் ஆறு நாள் லீவு!''

- வைகை ஆறுமுகம்

''மன்னர் போருக்குக் கிளம்பும் போது, மகாராணியார் வந்து ஆரத்தி எடுத்து வெற்றித் திலகம் இட்டார்களா?''

''எல்.ஐ.சி. பாலிசி ரெண்டு போடச் சொல்லி, கையெழுத்து வாங்கிக் கொண் டார்!''

- எம்.அசோக்ராஜா



# இரண்டாம் சிரிகேசி!



''அவையில் நான் பாடும் பாட்டை கேட்டிருக்கிறீர்களா அமைச்சரே?''

''ம்...ம்... அப்போது எங்கள் மன்னர் படும் பாட்டைத்தான் காண சகிக்கலை.''

- கே.ஆனந்தன்

''அமைச்சரே... நாம் 'அகல பாதை' போட்டிருப்பது பற்றி என்ன பேசிக் கொள்கிறார் கள்?''

''இனி மன்னர் தங்கு தடையின்றி புறமுதுகிட்டு ஓடி வரலாம் என்று பேசிக்கொள் கிறார்கள்!''

- ச.ஆ.கேசவன்



# மெட்ராஸ்...

ச.ந.கண்ணன்

**அதிரடித் திருப்பங்கள் நிகழும் ஒரு கொண்டாட்டவெளி சேப்பாக் மைதானம். இங்கு நடக்கும் கிரிக்கெட் மேட்ச்சுகள் உப்புச்சப்பின்றி முடிந்ததாக வரலாறு கிடையாது. ஓர் அதிரடி இருக்கும்; ஒரு திருப்பம் இருக்கும்; ஒரு சாதனை இருக்கும்; ஒரு பரபரப்பு இருக்கும். கூடவே சில சர்ச்சைகளும் கட்டாயம் இருக்கும். இதோ சில துளிகள்:**

'சேப்பாக்கம்தான் உலகிலேயே சிறந்த பேட்டிங் பிட்ச்' - 1996ல் நடைபெற்ற உலகக் கோப்பை கால் இறுதிப் போட்டி முடிவில், அன்றைய தினம் செஞ்சுரி அடித்த ஆஸ்திரேலிய வீரர் மார்க்வா(க்) இவ்வாறு சொன்னார். இந்திய ரசிகர்கள் வயிறு எரிய, சையத் அன்வர் 194 ரன்கள் அடித்ததும் இந்த சென்னை மண்ணில்தான். 1983-84 தொடரில் சுனில் கவாஸ்கர் 30வது செஞ்சுரி அடித்து டான் பிராட்மேனின் சாதனையை மிஞ்சியதும், 16 விக்கெட்டுகள் எடுத்து அதே வேகத்தில் காணாமல் போன நரேந்திர ஹிர்வானி, முதல் சர்வதேச பந்தை வீசியதும் இங்குதான். 1986-ல் நடைபெற்ற இந்தியாவுக்கும் ஆஸ்திரேலியாவுக்குமான டெஸ்ட் போட்டி டையில் முடிந்தது. இன்றைக்கும் இதுபற்றி கட்டுரைகள் வெளியிடப்படுவதுண்டு.

இந்தியாவில், கிரிக்கெட் அறிவு உள்ள சில நகரங்களில் சென்னையும் ஒன்று. ஹிந்து பேப்பர் மூலமாகக் கிடைத்த புள்ளிவிவரங்களை ஞாபகக்கிடங்கில் சேர்த்து வைத்துக்கொண்டு, அதை மைதானத்தில் வெளிப்படுத்துவார்கள் சென்னை ரசிகர்கள். 2004ஆம் ஆண்டு சென்னையில் நடந்த இந்தியாவுக்கும் ஆஸ்திரேலியாவுக்குமான டெஸ்ட் போட்டி, நான்காம் நாள் பெய்த மழையால் பாழாய்ப்போனது. அந்த ஆட்டத்தில் இர்பான் பதானின் விக்கெட்டை வீழ்த்தி 532 விக்கெட்டுகள் எடுத்த வார்னே, கூடவே, அதிக டெஸ்ட் விக்கெட்டுகள் எடுத்தவர் என்கிற சாதனையையும் எட்டினார். மைதானத்தில் அவர் சாதனை நிகழ்த்தியபோது வீரர்களை மிஞ்சும் வகையில் ரசிகர்களும் வார்னேவின் சாதனைக்குக் கரவொலி மூலம் பாராட்டுத் தெரிவித்தார்கள். கால்பந்து, கூடைப்பந்து போன்ற விளையாட்டுகளில், ரசிகர்கள் வீரர்களின் பெயரை உரக்கக் கூவிக்கொண்டே இருப்பார்கள். அதுபோல அன்றைய தினம் ரசிகர்கள் வார்னேவின் பெயரைத் தொடர்ந்து உச்சரித்துக்கொண்டே இருந்தார்கள் சென்னை ரசிகர்கள். அன்று ஆஸ்திரேலிய வீரர்கள், மெல்போர்னில் ஆடுவதுபோன்று மானசீகமாக உணர்ந்தார்கள்.

1999ல் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே நடந்த டெஸ்ட் போட்டி 20-20 மேட்ச்சுக்கு இணையாக விறுவிறுப்

# மெல்போர்னா..?

பாக அமைந்தது. சிக்ஸர் அடிக்கப்போய் சச்சின் அவுட்டானதைத் தொடர்ந்து, அந்த ஆட்டத்தில் தோல்வி கண்டது இந்தியா. கொல்கத்தா ரசிகர்களாக இருந்திருந்தால், தக்காளிகளையும் அழுகின முட்டைகளையும் மைதானத்துக்குள் வீசியிருப்பார்கள். ஆனால், நல்ல கிரிக்கெட்டை ரசிக்க வந்த சென்னை ரசிகர்கள் அன்று ரசித்தது பாகிஸ்தானின் நேர்த்தியான ஆட்டத்தை.

ஸ்ரீகாந்த் தலைமையில் 89-ல் பாகிஸ்தானுக்குச் சென்றபோது, ஒருநாள் போட்டி ஒன்றில், இந்திய அணி மளமளவென்று பாகிஸ்தானின் விக்கெட்டுகளை வீழ்த்தியது. அவ்வளவுதான், ரசிகர்கள் கலாட்டா செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். பவுண்டரி லைனுக்கு அருகில் நின்றிருந்த இந்திய வீரர்கள்மீது, கண்ணாடி பாட்டில்கள் எறியப்பட்டன. 'க்ரவுட் டிஸ்டர்பன்ஸ்' என்று அந்த ஆட்டம் அரை மணி நேரத்தில் நிறுத்தப்பட்டது. இது போன்ற கிரிக்கெட் கலாசாரத்தில் வாழ்ந்த பாகிஸ்தானியர்களுக்கு, ஆட்டம் முடிந்தவுடன் சென்னை ரசிகர்கள் எழுந்துநின்று கைத்தட்டியது நம்பமுடியாத செயலாகக் காட்சியளித்தது. பதில் உபகாரமாக, பாகிஸ்தான் கேப்டன் இன்ஸமாம், வீரர்களை அழைத்துக்கொண்டு மைதானம் முழுக்க வலம் வந்து ரசிகர்களையும் சென்னையையும் கௌரவப்படுத்தினார்.



ஆனால், கிரிக்கெட் மேட்ச்சின்போது பொளந்துகட்டுகிற மழையை மட்டும் யாராலும் ரசிக்கமுடியவில்லை. இந்த முறை மேட்ச் நடக்கும் மூன்று நாட்களுக்கு முன்வரைகூட மைதானம் ஈரமாகவே இருந்து வருகிறது. இதழ் அச்சேறும் நேரம், இந்தியாவுக்கான பிரார்த்தனை, வெயிலுக்கான வேண்டுதலாக மாறியிருக்கிறது! வேண்டும் என்கிற பிரார்த்தனை வழக்கொழிந்துபோய், தோற்றாலும் பரவாயில்லை கனீரென வெயில் அடிக்கவே மனம் ஏங்குகிறது. ●

என்னுடைய மனைவி கமலாவின் அய்யா வை.க.சண்முகம் செட்டியார் பழைமையான காங்கிரஸ்காரர். அவரது குடும்பத்தில் ஒரு சொத்து தொடர்பாக வழக்கு நடந்தது. சிங்கப்பூரில், மூன்று தலைமுறைகளுக்கு முன்னால் போடப் பட்ட அந்த வழக்கு, அப்பீல் மேல் அப்பீலாகி அந்தக் காலத்தில் லண்டனில் இருந்த பிரிவி கவுன்சில் வரை சென்றது. சுமார் ஒரு நூற்றாண்டுகாலம் நடந்த அந்த வழக்கு ஒரு வழியாக முடிந்தபோது, இரண்டு தரப்பினரும் அந்தச் சொத்தின் மதிப்புக்கு மேலாக செலவு செய்திருந்தார் கள். அது மட்டுமா? மூன்று தலைமுறை யினர், அந்த வழக்கு காரணமாக மன உளைச்சலுக்கு ஆளாகி வாழ்ந்தார்கள். இந்த அனுபவமே, கோர்ட் பக்கம் கூடத் திரும்பிப் பார்க்கக் கூடாதென்ற வைராக் கியத்தை எங்களுக்குத் தந்தது. ஆனால், நான் இயக்கிய ஒரு படத்தின் தலைப்பு, என்னை கோர்ட் படி யேற வைக்கும் என்று நான் கனவிலும் நினைத்துப் பார்க்கவில்லை. அந்தப் படம் கவிதாலயா தயாரிப்பில் நான் இயக்கிய 'நான் மகான் அல்ல'.

அந்தப் படத்துக்கு நாங்கள் முதலில் வைத்த பெயர் 'நான் காந்தி அல்ல'. படப் பிடிப்பு ஆரம்பித்து நடந்து கொண்டிருந்த போது, ஒருவர் 'சினிமாவின் டைட்டிலில் காந்திஜியின் பெயரைப் பயன்படுத்தக் கூடாது' என்று வழக்குப் போட்டார். எங் கள் தரப்பிலும் வழக்கறிஞர்களைக் கலந் தாலோசித்தோம். படத்தின் கதைக்கு இந்தப் பெயர்தான் மிகவும் பொருத்தம் என்று நமது தரப்பில் வாதிட்டாலும், தீர்ப்பு நமக்குச் சாதகமாக இருக்க வாய்ப் பில்லை என்று கருத்துத் தெரிவித்தனர். அதன் பேரில் படத்தின் டைட்டிலை, 'நான் மகான் அல்ல' என்று நாங்கள் மாற்றிக் கொள்கிறோம் என்று நாங்களா

# கோர்ட்டில்

கவே கோர்ட்டில் தெரிவித்தோம். இப்படித் தான் படத்தின் பெயர் மாற்றப்பட்டது. இந்த வழக்குக்காகத்தான் நான் கோர்ட் படி ஏறினேன். இந்தச் சம்பவம் படத் துக்கு நல்லதொரு விளம் பரத்தைத் தேடித் தந்தது.



'நான் மகான் அல்ல' படத்துக் காக, நான் மகாத்மா காந்தியைப் பற்றி நிறைய படித்துத் தெரிந்துகொண்டேன்.




அவரது அசாத்தியமான மனோ தைரியம் என்னைப் பிரமிக்க வைத்தது. நவகாளியில் இந்து-முஸ்லிம் கலவரம். காந்தி அங்கே வந்தால், வழியில் முட்களையும் கண் ணாடித் துண்டுகளையும் போட்டு வைப்போம் என்று கலவரக்காரர் கள் சொல்கிறார்கள். காந்திஜியோ, 'நான் வரும் வழியில் முட்களையும் கண்ணாடித் துண்டுகளையும் போட்டு வைத்தால், மத நல்லிணக்கத்தை ஏற்படுத்த நான் செருப்பு அணியாமல் நடந்து வருவேன்' என்று சொல்லிவிட்டு நவகாளிக்குப் புறப்பட் டுச்சென்றார். அதனால்தான் அவரால்,



# ரஜினி படம்!

எஸ்.பி.முத்துராமன்


* ரஜினி, ராதா...

இந்தியாவின் சுதந்திரம் என்ற ஒரே நோக்கத்தில் காஷ்மீர் முதல் கன்னியா குமரி வரை அனைவரையும் ஒன்றுதிரட்ட முடிந்தது.

**ப**டத்துக்கு ஏன் 'நான் காந்தி அல்ல' என்று பெயர் வைத்தோம் தெரியுமா? இன் றைக்கு அரசியலில் நிலவும் அராஜகத்துக்கு எதிராகப் போராடுகிற ஒரு மனிதனுடைய கதை. நியாயத்துக்காகப் போராடுகிற அவ னுடைய உயிருக்கே பலவிதமான ஆபத்து கள் வருகிறபோது, அவன் ஆயுதத்தைக் கையில் எடுக்க வேண்டிய கட்டாயமான சூழ்நிலைக்குத் தள்ளப்படுகிறான்; தீவிர வாதியாக மாறுகிறான். காந்திஜி வெள் ளைக்காரர்களின் பீரங்கியை, தம் ராட் டையை வைத்து எதிர்த்தார். அப்படி இந்தக் கொள்ளைக்காரர்களை எதிர்க்க 'நான் காந்தி அல்ல' என்று ரஜினி ஆயுதம் எடுப்பார். இதுபோன்ற சூழ்நிலை ஏற் படாதபடி கவனமாக இருக்கவேண்டிய [illegible]

'காந்தி பிறந்த இந்தத் தேசத்தில் தீவிரவாதம் வளர அனுமதிக்கக் கூடாது' என்று இறுதிக்காட்சியில் சிறைக் குச் செல்லும்போது ரஜினி சொல்வார்.

வழக்கமாகவே, ரஜினி படங்களில் ஆக்‌ஷனுக்குக் குறைவு இருக்காது. இந்தக் கதையில் அதிரடியான ஆக்‌ஷன் காட்சி களுக்கு நிறைய வாய்ப்புண்டு என்பதால், ரஜினியின் ஒவ்வொரு காட்சியிலும் வச னங்களிலும் சரி, நடிப்பிலும் சரி மனத் தைத் தொடும்படியான பல காட்சிகள்.

உதாரணமாக, ஒரு கால் ஊனமுற்ற

பெண்ணை, சமூக விரோதிகள் பாலியல் பலாத்காரம் செய்து விடுவார்கள். இது ரஜினியை கோபத்தில் துடிதுடிக்க வைக்கும். அத்தகைய காட்சிகளின் போதெல்லாம் தியேட்டரே கைத் தட்டலில் அதிரும்.



படத்தின் இறுதியில், ஒரு போலீஸ் ஸ்டேஷனிலேயே ஒரு கொலை நடக்கும்; அப்போது ஸ்டேஷனில் மாட்டப்பட்டிருக்கும் மகாத்மா காந்தி படத்தின்மீது ரத்தம் தெறிக்கும். 'ரத்தமின்றி யுத்தம் நடத்திய தேசத்தில் ரத்தக்களரி' என்று சுட்டிக்காட்டுவதற்காக அந்தக் காட்சியை இடம் பெறச் செய்திருந்தோம். ஆனால், படம் தணிக்கைக்குப் போன போது, அந்தக் காட்சியை நீக்கும்படிச் சொல்லிவிட்டார்கள். சமூகத்துக்கு வன்முறை தவறான வழி என்ற மெசேஜை, கமர்ஷியல் பாணியில் சொன்ன 'நான் மகான் அல்ல' படம் வர்த்தக ரீதியில் பெரும் வெற்றியைப் பெற்றது.

ரஜினி மிகவும் பிஸியாக இருந்த காலகட்டத்தில், எங்களுக்கு இருபத்தைந்து நாட்கள் மட்டுமே கால்ஷீட் கொடுத்தார். வெறும் இருபத்தைந்து நாட்களில் ரஜினியை வைத்துப் படம் எடுக்க முடியுமா? அதைப்பற்றி அடுத்த வாரம்.

எழுத்து வடிவம் :
**எஸ்.சந்திரமௌலி**

**சோ** எழுதிய

# மஹாபாரதம் பேசுகிறது
ரூ. 600/-

# வால்மீகி ராமாயணம்
ரூ. 600/-

# ஹிந்து மஹா சமுத்திரம்
(3 பாகங்கள்)
ரூ. 600/-

# அதிர்ஷ்டம் தந்த அனுபவங்கள்
ரூ. 145/-

# இந்து தர்மம்
ரூ. 75/-

# எங்கே பிராமணன்?
ரூ. 125/-

# வெறுக்கத்தக்கதா பிராமணீயம்?
ரூ 35/-

| | | | |
|---|---|---|---|
| 1. வந்தே மாதரம் | 115.00 | 19. யாருக்கும் வெட்கமில்லை | 40.00 |
| 2. வாஷிங்டனில் நல்லதம்பி | 100.00 | 20. சட்டம் தலை குனியட்டும் | 40.00 |
| 3. சர்க்கார் புகுந்த வீடு | 100.00 | 21. எங்கே போகிறாய்? | 40.00 |
| 4. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 1) | 130.00 | 22. என்று தணியும் இந்த சுதந்திர தாகம்? | 35.00 |
| 5. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 2) | 75.00 | 23. இறைவன் இறந்து விட்டானா? | 35.00 |
| 6. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 3) | 40.00 | 24. இன்பக் கனா ஒன்று கண்டேன் | 25.00 |
| 7. துக்ளக் படமெடுக்கிறார் | 50.00 | 25. சாத்திரம் சொன்னதில்லை | 40.00 |
| 8. அதிகப் பிரசங்கம் | 45.00 | 26. சரஸ்வதியின் சபதம் | 35.00 |
| 9. இவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள் | 50.00 | 27. ஜட்ஜ்மெண்ட் ரிசர்வ்டு | 35.00 |
| 10. யாரோ இவர் யாரோ? | 65.00 | 28. நேர்மை உறங்கும் நேரம் | 30.00 |
| 11. சாதல் இல்லையேல் காதல் | 60.00 | 29. மனம் ஒரு குரங்கு | 40.00 |
| 12. மை டியர் பிரம்மதேவா | 30.00 | 30. ஏன் கூடாது? | 40.00 |
| 13. இந்தியா எங்கே போகிறது? | 20.00 | 31. இரவில் சென்னை | 40.00 |
| 14. துக்ளக் கேள்வி - பதில் I & II | 100.00 | 32. முகமது பின் துக்ளக் | 35.00 |
| 15. ஒன்றரைப் பக்க நாளேடு | 40.00 | 33. உறவுகள் இல்லையடி பாப்பா | 40.00 |
| 16. காமராஜை சந்தித்தேன் | 60.00 | 34. சம்பவாமி யுகே யுகே | 40.00 |
| 17. புரட்சி கீதை | 35.00 | 35. எதற்காக? | 35.00 |
| 18. திரையுலகைத் திரும்பிப் பார்க்கிறேன் | 45.00 | 36. உண்மையே உன் விலை என்ன? | 45.00 |

எஸ். குருமூர்த்தி எழுதிய **தண்ணீர் விட்டோ வளர்த்தோம்** (3 பாகங்கள்) ரூ. 525/-

பரத்வாஜ் எழுதிய **ஆட்சி முறை - ஒரு பார்வை** - ரூ. 200/-

**கிவாஜ** எழுதிய

**தமிழ்ப் பழமொழிகள்** (4 பாகங்கள்) ரூ. 400/- **கி.வா.ஜ. பதில்கள்** (3 Vols) ரூ.165/

**அபிராமி அந்தாதி விளக்கவுரை** (4 பாகங்கள்) ரூ. 300/-

**கந்தர் அலங்காரச் சொற்பொழிவுகள்** (6 பாகங்கள்) ரூ. 735/-

**தேவன்** எழுதிய

| | | | |
|---|---|---|---|
| 1 துப்பறியும் சாம்பு - நாடகங்கள் | ரூ.65.00 | 8 ஏன் இந்த அசட்டுத்தனம் | ரூ.55.00 |
| 2 சொன்னபடி கேளுங்கள் | 54.00 | 9 விச்சுவுக்குக் கடிதங்கள் | 55.00 |
| 3 மல்லாரி ராவ் கதைகள் | 60.00 | 10 ராஜத்தின் மனோரதம் | 50.00 |
| 4 அப்பளக் கச்சேரி | 70.00 | 11 சீனுப்பயல் | 60.00 |
| 5 ராஜியின் பிள்ளை | 45.00 | 12 பார்வதியின் சங்கல்பம் | 60.00 |
| 6 போக்கிரி மாமா | 90.00 | 13 பல்லிசாமியின் துப்பு | 75.00 |
| 7 மனித சுபாவம் | 65.00 | 14 சின்னஞ் சிறு கதைகள் | 65.00 |
| | | 15 ரங்கூன் பெரியப்பா | 52.00 |



அல்லயன்ஸ்
(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ் புத்தக நிறுவனம்)
(பண்ட்) 244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மைலாப்பூர் - சென்னை 600 004.
தொலை பேசி 24 64 13 14 www.alliancebook.com e.mail: srinivasun@alliancebook.com

# காதல் கோயில்...



தென் கிழக்கு ஆசிய நாடுகளின் 'சார்க்' கூட்டமைப்பு, இளம் கவிஞர்களுக்கான 'கவிதைத் திருவிழா'வினை சமீபத்தில் ஒரிசாவில் வெற்றிகரமாக நடத்தியிருக்கிறது. அவ்விழாவில் கலந்துகொண்டு தன் கவிதைக்குப் பாராட்டுப் பெற்று பன்மொழிக் கவிஞர்களின் கவி மழையில் நனைந்த திரைப்பாடலாசிரியர் நா.முத்துகுமார் மெய்சிலிர்த்துப் பேசுகிறார்.

''பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான், நேபாளம், பூடான், வங்கதேசம், மாலத்தீவு, இலங்கை, மலேசியா மற்றும் நம் இந்தியாவிலிருந்து 35 வயதுக்குட்பட்ட கவிஞர்கள் கவிதைச் சங்கமத்தில் கலந்து கொண்டோம்.

மூன்று நாட்கள் நடந்த அந்தக் கவிதைத் திருவிழா, கோடைக்குக் கிடைத்த சிலீர் காற்றாகவும், குளிருக்குக் கிடைத்த கதகதப்பாகவும் ரொம்பவே சிலிர்ப்பா இருந்துச்சு!'' என்று மிகவும் சிலாகிக்கிறார்.

''புவனேஸ்வர்லதான் நிகழ்ச்சி ஆரம்பமாச்சு. கலைநிகழ்ச்சிகள் ஒவ்வொண்ணும் பிரமாதப்படுத்திட்டாங்க. ஒவ்வொரு நாட்டிலேயிருந்தும் ரெண்டு கவிஞர்களைத் தேர்ந்தெடுத்திருந்தாங்க. தமிழ்நாட்டிலிருந்து நானும் கவிஞர் வெண்ணிலாவும் கலந்துகிட்டோம்.

இரவு வரைக்கும் நீண்ட கவிதை வாசிப்பில், வாசிக்கப்படும் கவிதைகளை அறிந்துகொள்ளும் வகையில் ஆங்கில மொழியாக்கம் செய்யப்பட்ட புத்தகம் கொடுத்திருந்தாங்க. அதனால, வாசிக்கப்படும் போதே, அந்தக் கவிதைகளை உடனுக்குடன் புரிந்து கொண்டு ரசிக்க முடிஞ்சது.

ரெண்டாவது நாள் 'கோனார்க்' நகரத்திலுள்ள சூரியன் கோயிலுக்கு அழைக்கப்பட்டிருந்தோம். புராதனச் சின்னமா திகழும் அந்தக் கோயில்ல, சூரியனோட பெருமையையும், பலவித கோணங்களையும் காட்டும் விதமா சிலைகளை ரொம்ப அற்புதமா வடிச்சிருக்காங்க.

காலை, மதியம், மாலை என மூன்று பொழுதுகளிலும் சூரிய ஒளி விழற மாதிரி அமைக்கப்பட்ட விதம் ஆச்சரியமானது! கோயில் சுவர்கள்ல கஜுராஹோ சிற்பங்கள் மாதிரியான சிற்பங்களைத் தத்ரூபமா செதுக்கி இருக்காங்க.

பூரி மாவட்டத்தில் ஆட்சியர்



# கவிதைச் சங்கமம்!

அலுவலகத்தோட அரங்கில், இலக்கிய - கலாசார நிகழ்ச்சி ஒன்றிலும் கலந்துக்கிட்டோம்.

மூன்றாம் நாள் நிகழ்வு, கட்டாக் நகரத்திலே இருக்கிற இருநூறு வருஷங்களுக்கு முற்பட்ட, பழைமையான 'ராவன்ஷா' பல்கலைக் கழகத்தில் நடந்தது. 'ஐந்தாம் வகுப்பு அ பிரிவு' என்ற கவிதையை நான் வாசித்தபோது அரங்கில் பலத்த வரவேற்பு! அந்தக் கவிதைக்குக் கிடைச்ச வரவேற்பு எனக்கே ஆச்சரியமாயிடுச்சு. 'சார்க்' நாடுகளின் 15 மொழிகளில், அந்தக் கவிதை மொழிபெயர்க்கப்படும் என்ற தகவலை வெளியிட்டுப் பெருமைபடுத்திட்டாங்க.

இலங்கைத் தமிழ்க் கவிஞர், 'அனார்' கவிதையும் நல்ல வரவேற்பைப் பெற்றது. அங்கே வாசிக்கப்பட்ட 60 கவிஞர்களின் கவிதைகளில் மூன்றுதான் தமிழ்க் கவிதை! ஆனால், மிகப்பெரும் வரவேற்புக் கிடைத்தது தமிழுக்குத்தான்!

இந்த மூன்று நாள் நிகழ்வு ஓர் உண்மையை உணர்த்தியது. வந்திருந்த கவிஞர்கள் வயதில் குறைந்தவர்களாக இருந்தாலும் வார்க்கும் கவிதைகளில் பெரும் வீச்சு இருப்பது புரிந்தது.

இலக்கியத்தை முன்னெடுத்துச் செல்லும் படைப்பாளிகளுக்கு, இதுபோன்ற பயணங்களும் பகிர்வுகளும், அவர்களின் படைப்பாற்றலை மேன்மேலும் வளர்க்கும் என்பதைக் கண்கூடாகக் காண முடிந்ததில் எனக்குப் பெருமகிழ்ச்சி!''

அந்த இலக்கிய அனுபவம் குறித்து கவிஞர் அ.வெண்ணிலாவிடம் கேட்டபோது, '' 'சார்க்' நாடுகளின் கவிதை விழாவில் கலந்துகொண்டது நல்ல அனுபவம். இந்த நிகழ்ச்சியில் எட்டு நாடுகளைச் சேர்ந்த கவிஞர்கள் கவிதை வாசிக்க மட்டுமே அழைக்கப் பட்டிருந்தோம். ஆனால், நிகழ்ச்சி போதிய திட்டமிடல் இல்லாமல் இருந்தது. இதுபோன்ற குறைகளைத் தவிர்த்தால் நிகழ்ச்சி மேலும் சிறக்கும்'' என்றார்.

**- எம்.ஆர்.இராஜேந்திரன்**



* கவிஞர்களுடன் அ.வெண்ணிலா, நா.முத்துக்குமார்

# உயிர்க்கிணறு

முத்தம்மாவையும் இரண்டு பிள்ளைகளையும் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளினான் ராமசாமி. சேற்றில் முகம் புதைய சொத்தென்று வந்து விழுந்தனர் மூவரும். மழை பெய்துகொண்டிருந்த இரவு நேரம் அது. அவரவர் வீட்டு ஜன்னலிலிருந்து தெருவே வேடிக்கை பார்த்தது. முத்தம்மாவுக்கு அவமானம் பிடுங்கித் தின்றது; அழுகை வந்தது. உதட்டைக் கடித்துக்கொண்டு, பக்கத்துக்கு ஒன்றாய்ப் பிள்ளைகளை அணைத்துக்கொண்டு நடக்க ஆரம்பித்தாள்.

குடிகாரக் கணவனின் கொடுமையை இனியும் சகிக்க முடியாது. இந்தப் பாழும் உலகில் தானும் தன் பிள்ளைகளும் பட்ட அவமானமும் கஷ்டமும் போதும். சின்ன வயதில் நல்லதங்காள் கதை சொல்லி, தன்னை வளர்த்த அம்மா ஞாபகம் வந்தது. அந்த அம்மா இப்பொழுது இல்லை. ஆனால், அவள் சொன்ன கதை அப்படியே நினைவில் உள்ளது. நல்லதங்காள் போல் பிள்ளைகளைக்கிணற்றில் தள்ளிவிட்டு, தானும் குதித்து உயிர்விட வேண்டியதுதான். இருளில், மழையில் நனைந்துகொண்டே குழந்தைகளுடன் தேடிப் பார்த்தாள். பாழுங்கிணறு எதுவும் தென்படவில்லை.

வெயில் ஏறிக்கொண்டிருந்தது. அலைபுரளும் கடலை நோக்கி நடந்தாள். ஓரிடத்தில் கூட்டமாக மக்கள் நின்றுகொண்டிருந்தனர். முத்தம்மாவும் அருகே சென்று எட்டிப் பார்த்தாள். ஆழ்துளைக் குழாய் குழியிலிருந்து அந்தக் குழந்தையை மெல்ல வெளியே எடுத்தனர். இருபது மணி நேரப் போராட்டத்துக்குப் பின் வெற்றிகரமாய் மீட்கப்பட்ட குழந்தை!

உலகமே பிரார்த்திக்க, உயிருடன் குழந்தையை மீட்டவுடன் பட்டாசு வெடித்துக் கொண்டாடினர். மகிழ்ச்சி அலை எங்கும் பரவி இருந்தது. யாரோ ஓர் இளைஞன் இவர்களுக்கு லட்டு வழங்கினான். ஓர் இளைஞன் ஓடி வந்து, இவளது மகனைத் தூக்கித் தட்டாமாலை சுற்றி மார்போடு அணைத்துக்கொண்டான்.



முத்தம்மாள், கண்ணைத் துடைத்துக் கொண்டாள். பிள்ளைகளை அணைத்துக் கொண்டு, நம்பிக்கையோடு, திரும்பவும் ஊரை நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.

ஆர்.லதா

ஓம் ஸ்ரீகுருப்யோ நம: ஓம் ஹ்ரீம் புவநேச்வர்யை நம:



# ஸத்குரு சாந்தாநந்த மஹாஸ்வாமிகளின் பக்தர்களுக்கு ஓர் அன்பான அறிவிப்பு

1. சென்னை மாநகரில் ஸத்குரு சாந்தாநந்த ஸத் ஸங்கம் என்ற பெயரில் ஓர் அறக்கட்டளை துவக்கப்பட்டுள்ளது.
2. இந்த அறக்கட்டளை தற்சமயம் புதுக்கோட்டை ஸ்ரீபுவநேச்வரீ அவதூத வித்யா பீடத்தின் பீடாதிபதியாக விளங்கி வருகின்ற ஸத்குரு ஓங்காராநந்த மஹாஸ்வாமிகளின் தலைமையின் கீழ் இயங்கி வருகின்றது.
3. தற்போது இந்த அறக்கட்டளை, நாமக்கல் அருகிலுள்ள சேந்தமங்கலத்தில் இருக்கின்ற ஸத்குரு சாந்தாநந்த மஹாஸ்வாமிகளின் குருநாதர் ஸத்குரு ஸ்வயம் ப்ரகாச மஹாஸ்வாமிகளின் அதிஷ்டான திருப்பணிகளைச் செய்து வருகின்றது. இத்திருப்பணிக்கு நன்கொடைகள் அன்புடன் வரவேற்கப்படுகின்றன. (ஜூலை மாதம் 14ஆம் நாளன்று மஹா கும்பாபிஷேகம் செய்ய திட்டமிடப்பட்டுள்ளது).
4. அறக்கட்டளை திட்டமிட்டுள்ள பணிகள் :
   - ஏழை, எளிய மாணவர்களுக்கு கல்வி உதவி முதலான சமூகப் பணிகள் செய்தல்.
   - சிறந்ததொரு நூலகம் அமைத்தல்.
   - சென்னை மாநகரின் முக்கிய பகுதி ஒன்றில் ஸத்குரு சாந்தாநந்த மஹாஸ்வாமிகளின் திருப்பெயரில் கலையரங்கம் ஒன்று உருவாக்குதல்.
   - அக்கலையரங்கத்தின் முற்பகுதியில் 18 அடி உயரத்தில் ஸத்குரு சாந்தாநந்தர் அவர்களின் திருவுருவச்சிலை நிறுவுதல்.
5. ஸ்ரீஸ்வாமிகளின் பக்தர்களை தொடர்பு கொள்வதற்காகவே இந்தத் தகவல் விளம்பரம் தரப்பட்டுள்ளது.
6. ஸத்குரு ஸ்வாமிகளுடைய பக்தர்கள் அனைவரும் ஸத்ஸங்கத்தில் தங்களை உறுப்பினர்களாக இணைத்துக்கொண்டு, அறக்கட்டளையின் அறப்பணிகளில் தங்களை ஈடுபடுத்தி குருவருள் பெற பேரன்புடன் அழைக்கின்றோம்.

இப்படிக்கு

**ஸத்குரு பூஜ்யஸ்ரீ ஓங்காராநந்த மஹாஸ்வாமிகளின்**

அருளாணைப்படி

**ஸத்குரு சாந்தாநந்த ஸத்ஸங்கம்**

**'சபரி ஸைநாதனா'** 142, முதல்மாடி, கிரீன்வேஸ் ரோடு, ராஜா அண்ணாமலைபுரம்,

சென்னை - 600 028. ☎ **+91-44-2464 1600 / 98400 51131**

# பருவுக்கும் மருவுக்கும் என்ன வித்தியாசம்?

"நம் உடம்புக்குச் சவால் விடக்கூடிய வெயில் காலம் வந்துருச்சு. சருமப் பாதுகாப்பில் எச்சரிக்கையா இருங்க!" என அக்கறையோடு குரல் கொடுக்கிறார் ஸ்கின் ஸ்பெஷலிஸ்ட் டாக்டர் டி.பாரி.

"வெயில் காலத்திலே வியர்வையால அரிப்பு, உடல்நாற்றம், படர்தாமரை, கொப்புளங்கள் போன்றவை சகஜம்! அதனால உடல்சுத்தம் ரொம்ப அவசியம்!

இப்படிப்பட்ட காலத்திலே உடம்பை இறுக்கற ஜீன்ஸ் மாதிரி இல்லாம, காற்றோட்டமான, வியர்வை உறிஞ்சுற காட்டன் டிரஸ் போட்டுக்கறது நல்லது!

அதிகமான வெப்பத்தால் சருமம் கறுத்தும், சுருங்கியும் போறதுக்கு வாய்ப்பு அதிகமா இருக்கு. சன் ஸ்கிரீன் லோஷன் போடலாம்" என்றவர், தோல் சம்பந்தமான சில நோய்கள் குறித்தும் சீரியலாகப் பேசினார்.

"'சோரியாசிஸ்'ங்கிற தோல் உதிர்வு நோய் வந்தா கை, கால், உள்ளங்கை, முட்டி போன்ற இடங்கள்ல கட்டுப்படுத்த முடியாத அளவுக்குத் தோல் வளர்ச்சி இருக்கும். இதனைக் கட்டுப்படுத்த ஃபோட்டோ தெரஃபி, பயோலாஜிக்கல் போன்ற நவீன சிகிச்சைகள் இருக்கு. ஆனா ரொம்ப காஸ்ட்லி!

வெண் புள்ளி மாதிரியான நோய்களுக்கு இப்போ அல்ட்ரா வயலட் சிகிச்சை இருக்கு.

சிக்கன் பாக்ஸ"க்குத் தடுப்பூசியும், மாத்திரைகளும் இருக்கு. இதன்மூலமா அம்மைத் தழும்புகளைத் தடுக்கலாம். குழந்தைகளுக்கு வர்ற சொரி, சிரங்குக்குச் சரியான சிகிச்சை எடுத்துக்கலேன்னா, அவர்கள் வளர்ந்த பின்பும் அந்தத் தழும்புகள் அசிங்கமா தெரியும்.

அலர்ஜி பத்தியும் நாம் கொஞ்சம் அலர்ட்டா இருக்கணும்!" என எச்சரிக்கிறார்.



"அலர்ஜிக்கு, சாப்பாடு, சருமத்தில் அழுந்தும் ஆபரணங்கள், ஒத்துவராத சில மாத்திரைகள், பூச்சிக் கடிகள்ன்னு நிறைய காரணங்கள் இருக்கு. 'பார்த்தீனியம்'ங்கிற செடியால பல பேருக்கு அலர்ஜி வருது. சரியான சிகிச்சை எடுத்துக்கிட்டோம்னா இந்த 'ஒவ்வாமை'கள் பத்தி ஒரு கவலையும் வேண்டாம்.



■ டாக்டர் டி.பாரி

டீன் ஏஜ் பருவத்தில் வர்ற பரு, ஒரு சாதாரண விஷயம்! ஆனா, சரியான கவனிப்பு இல்லேன்னா முகத்தோட அழகைக் கெடுத்திடும். பரு, 13 வயசிலேர்ந்து 26 வயசு வரைக்கும் வரலாம். வளர்பருவத்தில் வர்ற ஹார்மோன் மாற்றத்தினாலதான் பரு வருது. முகம் மட்டுமல்லாது மார்பு, முதுகுப் பகுதிகளிலும் பரு வரலாம். இதுக்கு சிம்பிளான சிகிச்சையே போதுமானது.

பல பேருக்குப் பருவுக்கும் மருவுக்






கும்கூட வித்தியாசம் தெரியறதில்லே. மரு, வைரஸ்களால் வருது. இதுக்கு எலக்ட்ரோ மற்றும் சர்ஜரி ஆகிய ரெண்டு வழியிலே சிகிச்சை இருக்கு. மருவை நிரந்தரமா நீக்கிடலாம்!

முடி கொட்டுறதும் தோல் சம்பந்தப் பட்டதுதான்! முடிகொட்டுறதுக்கு தோல் டாக்டர்கிட்டே வர்ற மக்களைவிட, கண்ட கண்ட எண்ணெயைத் தேடிப் போகிற மக்கள்தான் அதிகமா இருக்கறாங்க. அறிவி யல்பூர்வமான உண்மை என்னன்னா, எண்ணெயால முடி வளராது. முடி உதிர் வைத் தடுக்க டாக்டர்கிட்டே போறதுதான் சிறந்த வழி.

தலைமுடி கொட்டுறதுக்கு பொடுகு ஒரு முக்கிய பிரச்னை. முடி நல்லா வளரணும்னு சிலர் முட்டையை உடைச்சு தலைக்குத் தடவுவாங்க. அதுக்குப் பதிலா அந்த முட்டையைச் சாப்பிட்டாங்கன்னா, முட்டையோட முழு பலனும் கிடைக் கும்.

அதேபோல சிவப்பழகு கிரீம்கள், தோலுக்கு உண்டான நார்மல் கலர் என்னவோ அதைத்தான் தரமுடியும். கறுப்பா இருக்கறவங்க சிவப்பா மாற லாம்ங்கிறது சுத்தப் பொய்! மேலும், அது மாதிரியான கிரீம்களை நாலஞ்சு மாசத் துக்கு மேலே தொடர்ந்து உபயோகிக்கறது அவ்வளவு நல்லதும் இல்லே!'' என்றும் உஷார் படுத்துகிறார்.

''மங்கு, தேமல் பத்தியும் நம்மூர்ல சில மூடநம்பிக்கைகள் இருக்கு. குடும்பத்துக்கு ஆகாதுன்னு சொல்வாங்க. அதெல்லாம் அறிவீனம்! நல்ல சன் ஸ்கிரீன் உபயோகிச் சாலே தேமல், மங்கு எல்லாம் மறைஞ் சிடும்!''

உடம்பைச் சுத்தமா வெச்சுக்கறதும் வெயிலைத் தவிர்க்கிறதும், பேரிச்சை, கீரை, தக்காளி, கேரட் மற்றும் பழச்சாறுகள் போன்றவை சாப்பிட றதும் சருமப் பாது காப்புக்குச் சிறந்த வழி கள்!'' என்று டிப்ஸ் தருகிறார் டாக்டர் டி.பாரி.

- **கொற்றவன்**



## 29. சக்கரவர்த்தியின் கட்டளை

நெருங்கி வந்த படகுகளைப் பார்த்த படி சற்றுநேரம் திகைத்து நின்ற விக்கிரமன், சட்டென்று உயிர் வந்தவனைப் போல் துடித்து பொன்னனைப் பார்த்து, ''பொன்னா! எடு வாளை!'' என்று கூவினான்.

பொன்னனும் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். விக்கிரமனுடைய குரல் கேட்டதும், அவன் விரைந்து விக்கிரமன் அருகில் வந்து, ''மகாராஜா! எனக்கு ஒரு வரம் கொடுக்க வேண்டும்'' என்றான்.

''வரம் கேட்க நல்ல சமயம் பார்த்தாய், பொன்னா! சீக்கிரம் கேட்டுவிடு. ஆனால், என்னிடம் என்ன இருக்கிறது நீ கேட்பதற்கு?'' என்று சிறிது வியப்புடன் கூறினான் விக்கிரமன்.

''மகாராஜா! மாரப்பபூபதியின் ஆட்களுடன் தாங்கள் சண்டையிடக் கூடாது. அவர்கள் நிறையப் பேர். நாமோ இரண்டு பேர்தான்...''

''பொன்னா! நீதானா இப்படிப் பேசுகிறாய்? உனக்கும் சோழநாட்டு வீர வாசனை அடித்துவிட்டதா?'' என்றான் விக்கிரமன்.

''இல்லை, மகாராஜா! என் உயிருக்கு நான் பயப்படவில்லை. இந்த அற்ப உயிரை எந்த நிமிஷமும் விட்டுவிடச் சித்தமாயிருக்கிறேன். ஆனால், வேறு காரணங்கள் இருக்கின்றன. நாம் இப்போது சண்டையிட்டால், எல்லாம் கெட்டுப் போய்விடும். மகாராஜா! தங்களுடைய அன்னை அருள்மொழி தேவியைப் பார்க்க வேண்டாமா...? இன்னொரு முக்கிய விஷயம், தங்களுடைய மூதாதைகளின் வீரவாளைக் கொண்டு முதன்முதலில் உங்களுடைய சொந்தக் குடிகளையா கொல்வீர்கள்?'' என்று பொன்னன் கேட்ட போது, விக்கிரமனுடைய முகம் வாடியது.

''சரி பொன்னா! போதும், இனிமேல் ஒன்றும் சொல்ல வேண்டாம். நான் வாளைத் தொடவில்லை'' என்றான்.

பிறகு குந்தவியைப் பார்த்து, ''தேவி! இந்தப் பெட்டியைப் பத்திரமாய் வைத்திருக்க வேண்டும். மறுபடியும் சந்திக்க நேர்ந்தால் கொடுக்க வேண்டும்'' என்றான்.

ஆனால், குந்தவியின் செவிகளில் அவன் கூறியது விழுந்ததோ, என்னமோ தெரியாது. அவளுடைய முகத்தில் கோபம் கொதித்துக்கொண்டிருந்தது. ஆவேசம் வந்தவள்போல் நெருங்கி வந்த படகுகளைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

படகுகள் கரையை அடைந்தன. மாரப்ப பூபதி முதலில் படகிலிருந்து குதித்தான். மரியாதையாக குந்தவி தேவியை அணுகி, ''பெருமாட்டி! தங்கள் அனுமதியில்லாமல் இங்கு வந்ததற்காக மன்னிக்க வேண்டும். சக்கரவர்த்தியின் கட்டளையை நிறைவேற்றுவதற்காக வந்தேன்'' என்றான்.

குந்தவி முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க, ''எந்தச் சக்கரவர்த்தி? என்ன கட்டளை?'' என்றாள்.

''தங்களுடைய சகோதரர் மகேந்திர பல்லவரின் கட்டளைதான். செண்பகத் தீவிலிருந்து வந்திருக்கும் ஒற்றனைக் கைப்பற்றி, ஜாக்கிரதையாக காஞ்சிக்கு

# பார்த்திபன் கனவு



## அமரர் கல்கி

அனுப்பும்படி கட்டளை. இதோ பாருங்கள்!'' என்று மாரப்பன் ஓர் ஓலையை நீட்டினான்.

அதில் மகேந்திரனின் முத்திரையுடன் மேற்கண்ட விதமான கட்டளை எழுதியிருந்தது.

அதைப் பார்த்துவிட்டு குந்தவி, ''செண்பகத்தீவின் ஒற்றன் யார்?'' என்று கேட்டாள்.

''இதோ நிற்கிறானே, இவன்தான் தேவி!''

''இல்லை; இவர் ஒற்றன் இல்லை. நீர் திரும்பிப் போகலாம்.''

''தேவி! இவன் ஒற்றன் இல்லாவிட்டால் வேறு யார்? மனமுவந்து சொல்ல வேண்டும்!'' என்று மாரப்பன் கள்ள வணக்க ஒடுக்கத்துடன் கூறினான்.

''பூபதி! யாரைப் பார்த்துக் கேள்வி கேட்கிறாய்? உன்னை மறந்துவிட்டாயா?'' என்று கண்களில் கனல் பொறி பறக்க குந்தவி கேட்டாள்.

''இல்லை; என்னை நான் மறக்கவில்லை. எனக்கு அவ்வளவாக ஞாபக மறதி மட்டும் கிடையாது. இதோ இவனுடைய முகம்கூடப் பார்த்த முகமாக என் ஞாபகத்தில் இருக்கிறது. ஆம்; இதோ ஞாபகம் வந்துவிட்டது தேவி! இவன், மகாமேன்மை பொருந்திய தர்ம ராஜாதி ராஜ நரசிம்ம பல்லவ சக்கரவர்த்தியினால் தேசப்பிரஷ்ட தண்டனைக்குள்ளானவன் என்பதாய் ஞாபகம் வருகிறது. இவன் ஒற்றன் இல்லையென்றால், தேசப்பிரஷ்டன்! தேசப்பிரஷ்டமானவன் திரும்பி வந்தால், என்ன தண்டனையென்று தங்களுக்கே தெரியும். தேவி! என் கடமையை நான் செய்ய வேண்டும். தர்ம ராஜாதி ராஜாவான பல்லவச் சக்கரவர்த்தி, தம் சொந்தப் புதல்வியின் வார்த்தைக்காகக்கூட, நான் என் கடமையில் தவறுவதை ஒப்புக்கொள்ள மாட்டார்'' என்றான்.

குந்தவியின் உடம்பெல்லாம் நடுங்கிற்று; அவளுடைய மார்பு விம்மிற்று.

''சேனாபதி! இவர் என் விருந்தினர். இவருக்கு நான் பாதுகாப்பு அளித்திருக்கிறேன். இவருக்கு ஏதாவது நேர்ந்தால்...'' என்று கூறி, விக்கிரமனை மறைத்துக் கொள்பவள்போல் அவன் முன்னால் வந்து நின்றாள். மாரப்பன் கலகலவென்று சிரித்தான். ''ஆகா! சோழ வம்சத்தின் பெருமையை விளங்க வைக்கப் போகும் வீர சிங்கம். ஒரு பெண்ணின் முந்தானையில்



ஒளிந்துகொள்கிறான்!'' என்று கூறி மீண்டும் சிரித்தான். நாணத்தினாலும் கோபத்தினாலும் விக்கிரமனுடைய கண்கள் சிவந்தன. அவன் நாலு எட்டாக நடந்து குந்தவிக்கு முன்னால் வந்து நின்ற, மாரப்பனைப் பார்த்து, ''சித்தப்பா! இதோ நான் வரச் சித்தமாயிருக்கிறேன். அழைத்துப் போங்கள்'' என்றான்.

மாரப்பன் கேலிச் சிரிப்புடனே குந்தவியைப் பார்த்து, ''ஏழைமேல் ஏன் இவ்வளவு கோபம்? இவனைக் காப்பாற்றித்தான் ஆக வேண்டுமென்றால், தங்கள் தந்தையையோ தமையனாரையோ வேண்டிக் கொண்டால் போகிறது. சக்கரவர்த்தி கருணையுள்ளவர். இவன், காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டு கப்பமும் செலுத்த ஒப்புக்கொண்டால் கட்டாயம் மன்னித்து விடுவார்!'' என்றான். இந்த வார்த்தைகள் தான் எதிர்பார்த்தது போலவே விக்கிரமன், குந்தவி இருவருடைய முகங்களிலும் வேதனை உண்டாக்கியதை அறிந்த மாரப்பனுக்குக் குதூகலம் உண்டாயிற்று.

**வி**க்கிரமன் உடனே விரைவாகச் சென்று படகில் ஏறிக்கொண்டான்.

குந்தவி விக்கிரமனை மிகுந்த ஆவலுடன் நோக்கினாள். தன்னை அவன் திரும்பிப் பார்ப்பானென்றும், தன் கண்களினால் அவனுக்குத் தைரியம் கூறலாமென்றும் அவள் எண்ணியிருக்கலாம். ஆனால், விக்கிரமன் திரும்பிப் பார்க்கவேயில்லை.

மாரப்பன், இந்த நாடகத்தைச் சிறிது கவனித்துவிட்டுப் பிறகு பொன்னன் மீது தன் பார்வையைச் செலுத்தினான். ''அடே படகோட்டி! நீயும் வா; ஏறு படகில்'' என்றான்.

''அவன் ஏன் வரவேண்டும்? பொன்னனைப் பிடிப்பதற்கும் கட்டளையிருக்கிறதா?'' என்று குந்தவி கேட்டு, மாரப்பனைக் கண்களால் எரித்து விடுபவள்போல் பார்த்தாள். மாரப்பன் அந்தப் பார்வையைச் சகிக்க முடியாமல், ''கட்டளையில்லை தேவி! ஆனால், இந்த ஒற்றனுக்கு - தேசப் பிரஷ்டனுக்கு - இவன் ஒத்தாசை செய்திருக்கிறான்...'' என்றான்.

''பொன்னன் என்னுடைய ஆள். எனக்குப் படகோட்ட வந்திருக்கிறான். அவனைக் கொண்டுபோக உனக்கு அதிகாரமில்லை. ஜாக்கிரதை!'' என்றாள் குந்தவி.

மாரப்பன், அவளுடைய தொனியைக் கேட்டுத் தயங்கினான்.

குந்தவி மறுபடியும், ''தேசப் பிரஷ்டனுக்கு உதவி செய்ததற்காகப் பிடிப்பதென்றால், என்னை முதலில் பிடிக்க வேண்டும்!'' என்றாள்.

''ஆம்; தேவி! சக்கரவர்த்தியின் கட்டளை வந்தால் அதுவும் செய்வேன்'' என்றான் மாரப்பன். பிறகு அவன் படகோட்டிகளைப் பார்த்து, ''விடுங்கள்'' என்றான். படகுகள் உறையூரை நோக்கி விரைந்து சென்றன.



## 30. நள்ளிரவில்

**ப**டகுகள் போன பிறகு, குந்தவி பொன்னனைப் பார்த்து, ''படகோட்டி! உன் மனைவியை எங்கே விட்டு வந்திருக்கிறாய்?'' என்று கேட்டாள்.

பொன்னன் அக்கரையில் குடிசையில் விட்டு வந்திருப்பதைச் சொன்னான்.

''உடனே போய் அவளை இங்கே அழைத்துக்கொண்டு வா! பிறகு நமக்குப் பெரிய வேலையிருக்கிறது. உங்கள் மகாராஜாவை எப்படியாவது விடுதலை செய்ய வேண்டும். விடுதலை செய்து இரகசியமாக மாமல்லபுரத்துக்கு அனுப்ப வேண்டும். அவரை இந்த அமாவாசையன்று செண்பகத்தீவு செல்லும் கப்பலில் ஏற்றிய பிறகுதான் நமக்கு நிம்மதி'' என்றாள் குந்தவி.

பொன்னன் வியப்புடன், ''தேவி! எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே!'' என்றான்.

''உங்கள் மகாராஜா இங்கே ஜுரம் அடித்துக் கிடந்தாரல்லவா, பொன்னா? அப்போது அவர் தம்மை அறியாமல் கூறிய மொழிகளிலிருந்து அவர் யார், எதற்காக வந்தார் என்பதையெல்லாம் அறிந்து கொண்டேன். ஒவ்வொரு அமாவாசையன்றும் அவருக்காகச் செண்பகத் தீவின் கப்பல் மாமல்லபுரம் துறைமுகத்தில் வந்து காத்திருக்கும். அடுத்த அமாவாசை வருவதற்குள்ளே அவரைத் தப்புவித்து இரகசியமாக அனுப்பி வைக்க வேண்டும்!'' என்றாள் குந்தவி.

''அம்மணி! கோபித்துக்கொள்ளக் கூடாது. எனக்கு இன்னும் ஒரு விஷயம் விளங்கவில்லை. எதற்காக இப்படியெல்லாம் செய்ய வேண்டும்? தங்கள் தகப்பனாருக்கு ஒரு செய்தி அனுப்பினால் போதாதா?'' என்றான் பொன்னன்.

''என் தகப்பனாரை நீ சரியாய்த் தெரிந்து கொள்ளவில்லை, பொன்னா! ஆனால் மாரப்பன் தெரிந்துகொண்டிருக்கிறான். அவருக்குச் சட்டம் என்றால் சட்டம்தான். நீதி என்றால் நீதிதான். சக்கரவர்த்திக்குத் தெரிவதற்கு முன்னால், உங்கள் மகாராஜா கப்பலில் ஏறினால்தான் தப்பலாம். நல்ல வேளையாக, என் தந்தை இப்போது காஞ்சியில் இல்லை. ஏதோ காரியமாய் மாறு வேஷத்துடன் சுற்றிக் கொண்டிருக்கிறார். இதுதான் நமக்குச் சமயம்...''

இவ்விதம் குந்தவி கூறிவந்ததைக் கேட்டபோது பொன்னனுக்கு ஒரு நிமிஷம், தனக்குத் தெரிந்ததையெல்லாம் சொல்லிவிடலாமா என்று தோன்றியது. ஆனால், தான் சிவனடியாருக்குச் சத்தியம் செய்து கொடுத்திருந்தது நினைவுக்கு வந்தது. மேலும் அவர் என்ன முக்கிய நோக்கத்துடன் இம்மாதிரி இரகசியமாய் காரியங்கள் செய்து வருகிறாரோ, தெரியாது. அந்த நோக்கத்துக்குத் தன்னால் பங்கம் விளையக் கூடாது என்று தீர்மானித்துக்கொண்டு, குந்தவியின் மொழிகளைப் பொறுமையுடன் கேட்டு வந்தான். கடைசியில், ''தேவி! விக்கிரம மகாராஜாவின் க்ஷேமம் ஒன்றைத் தவிர, எனக்கு உலகில் வேறு ஒன்றும்

பொன்னனைப் பார்த்து மாரப்பன், "அடே படகோட்டி! நீயும் வா; ஏறு படகில்" என்றான்.



பொருட்டில்லை. தங்கள் கட்டளைப்படி எதுவும் செய்யக் காத்திருக்கிறேன்'' என்றான்.

''சந்தோஷம். நான் மாளிகைக்குப் போகிறேன். நீ முதலில் போய் வள்ளியை இங்கே அழைத்து வா!'' என்றாள் குந்தவி.

குந்தவியின் கட்டளையின் பேரில் கிடைத்த படகை எடுத்துக் கொண்டு பொன்னன் அக்கரைக்குச் சென்றான். இதற்குள் நன்றாக இருட்டிவிட்டது. பொன்னனுடைய கைகள் படகைச் செலுத்திக் கொண்டிருக்க, அவனுடைய உள்ளம் அலைந்து கொண்டிருந்தது. உறையூர் சிம்மாசனத்தில் அமர்ந்து ஆட்சி செலுத்த வேண்டிய விக்கிரம மகாராஜா, இன்று இரவு அதே உறையூரில் சிறையில் படுத்திருப்பார் என்பதை எண்ணியபோது அவனுடைய நெஞ்சு புண்ணாயிற்று. அன்றிரவே உறையூருக்குப் போய் ஊர் ஜனங்களிடமெல்லாம், 'உங்கள் மகாராஜா சிறையில் இருக்கிறார்!' என்ற



செய்தியைப் பரப்பி ஒரு பெரிய கலகத்தை உண்டு பண்ணலாமா என்று பொன்னன் நினைத்தான். பிறகு, அது நடக்காத காரியம் என்று அவனுக்கே தோன்றியது. சோழ நாட்டு மக்கள் இப்போது வீரமிழந்த கோழைகளாகப் போய்விட்டார்கள். அயல் மன்னனின் ஆதிபத்தியத்தை ஒப்புக் கொண்டு வாழ்கிறார்கள். மாரப்பனைப் போல் பல்லவ சக்கரவர்த்தியின் கட்டளைகளை அடிபணிந்து நிறைவேற்றவும் காத்திருக்கிறார்கள்.

தன்னுடைய நிலைமையும் அதுதானோ என்ற எண்ணம் பொன்னனுக்குத் தோன்றியபோது அவனுடைய உடம்பு வெட்கத்தினால் குறுகியது. சிவனடியாரின் வேஷத்தையும் அவருடைய பேச்சையும் முழுவதும் நம்பலாமா? அவர் கூறியதெல்லாம் உண்மை என்பது என்ன நிச்சயம்? ஒருவேளை தானே ஏமாந்து போயிருக்கலாமல்லவா... விக்கிரம மகாராஜாவிடம் உண்மையான அன்பு கொண்டு, அவரைக் காப்பாற்றக் கவலை கொண்டிருப்பவர் குந்தவிதேவி என்பதில் சந்தேகமில்லை. யமன் வாயிலிருந்தே அவரை மீட்டு வரவில்லையா? - இவ்விதம் பலவாறாக யோசித்துக் கடைசியில் பொன்னன் குந்தவிதேவியின் விருப்பத்தின்படி காரியம் செய்வதென்று உறுதி கொண்டான்.

படகு அக்கரையை அடைந்ததும் பொன்னன் தன் குடிசையை அடைந்து கதவு சாத்தித் தாளிட்டிருப்பதைப் பார்த்து அதிசயித்துக் கதவைத் தட்டினான். ''யார் அது?'' என்று வள்ளியின் அதட்டும் குரல் கேட்டது. பொன்னனின் குரலைத் தெரிந்து கொண்ட பிறகுதான் அவள் கதவைத் திறந்தாள். 'கதவை அடைப்பானேன்?' என்று கேட்டபோது, அவள் கூறிய விவரம் பொன்னனுக்கு வியப்பையும் பயங்கரத்தையும் உண்டாக்கிற்று.



பொன்னன் வருவதற்குச் சற்று முன்னால், இருட்டுகிற சமயத்தில் ஏதோ பேச்சுக் குரல் கேட்டு வள்ளி குடிசைக்குள் சென்று கதவைச் சாத்திக்கொண்டாள். பேச்சுக் குரல் குடிசையின் பக்கம் நெருங்கி வந்தது. ஒரு பயங்கரமான பேய்க்குரல், ''நீ இங்கேயே இருந்து பூபதியை அழைத்துக்கொண்டு வா! நான் கோயிலுக்குப் போகிறேன்'' என்றது. இன்னொரு குரல், ''மகாப் பிரபோ! இந்தக் குடிசையில் தங்கியிருக்கலாமே!'' என்றது. ''நீ இருந்து அழைத்து வா!'' என்று முதலில் பேசிய பயங்கரக் குரல் கூறிற்று. சற்றுப் பொறுத்து வள்ளி மெதுவாகத் திறந்து பார்த்தபோது தூரத்தில் இருவர் போவது மங்கிய வெளிச்சத்தில் தெரிந்தது. அவர்களில் ஒருவன் நெட்டையாக வளர்ந்தவன்; அவனுக்கு ஒரு கை இல்லை என்பதைக் கண்டதும் நெஞ்சுத் துணிவுள்ள வள்ளிகூடப் பயந்து நடுங்கிவிட்டாள். காவேரி சங்கமத்தில் சூரிய கிரகணத்தின் போது அருள்மொழி ராணியைத் தூக்கிச் சென்ற உருவம் இதுதான் என்பது அவளுக்கு நினைவு வந்ததினால் திகில் அதிகமாயிற்று. அவனுக்குப் பக்கத்தில் போனவன் ஒரு



சித்திரக் குள்ளனாகத் தோன்றினான். இந்தக் குள்ளனுக்குப் பக்கத்தில் அந்த நெட்டை உருவம் இன்னும் நெடியதாய்க் காணப் பட்டது.

நெடிய ஒற்றைக்கை மனிதன் சாலையோடு கிழக்கே போய்விட்டான். குள்ளன் சாலை ஓரத்தில் ஒரு மரத்தில் உட்கார்ந்து கொண்டான். வள்ளி மறுபடியும் கதவைச் சாத்திக் கொண்டாள்.

இதையெல்லாம் சொல்லிவிட்டு வள்ளி சுற்றுமுற்றும் பார்த்தாள். பொன்னனுடைய கையைச் சட்டென்று பிடித்துக் கொண்டு ''அதோ பார்'' என்றாள். சாலை ஓரத்து மரத்தடியில் அந்தக் குள்ள உருவம் காணப்பட்டது. அவன் குடிசைப் பக்கம் உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதாகவும் தோன்றியது. பொன்னன், சற்று யோசித்து விட்டு, ''வள்ளி! வா! இன்று ராத்திரி உனக்கு வேலை இருக்கிறது'' என்றான்.

**மாரப்பன் காட்டிய ஓலையில் மகேந்திர பல்லவரின் முத்திரை இருந்தது!**

''எங்கே வரச் சொல்கிறாய்! உறையூருக்கா?'' என்று வள்ளி கேட்டாள்.

''இல்லை; வசந்தத் தீவுக்குத்தான். குந்தவி தேவி உன்னை அழைத்துவரச் சொன்னார்.''

''அப்படியா? இளவரசர் - மகாராஜா - சௌக்கியமா? அவர் யாரென்று தேவிக்குத் தெரியுமா?'' என்று வள்ளி ஆவலுடன் கேட்டாள்.

''ரொம்ப விஷயம் இருக்கிறது. எல்லாம் படகில் சொல்கிறேன் வா!'' என்றான் பொன்னன்.

இரண்டு பேரும் நதிக்கரைக்குச் சென்றார்கள். பொன்னன் வேண்டுமென்றே அதிகமாகச் சத்தப்படுத்திப் படகை அவிழ்த்து விட்டதோடு, சலசலவென்று சப்திக்கும்படியாகக் கோலைப் போட்டு படகைத் தள்ளினான். படகு போவதை அந்தக் குள்ள உருவம் கவனிக்கிறது என்பதை அவன் கவனித்துக்கொண்டான்.

நடுநிசிக்கு ஒரு நாழிகைப் பொழுது இருக்கும் சமயத்தில், பொன்னன் மறுபடியும் படகைத் தள்ளிக்கொண்டு காவேரியின் தென்கரைக்கு வந்தான். இப்போது அவன் தோணித் துறைக்குப் படகைக் கொண்டுவராமல், கொஞ்சம் கிழக்கே கொண்டுபோய்ச் சத்தம் செய்யாமல் நிறுத்திவிட்டுக் கரையேறினான். சாலையோரத்தில் தான் முன் பார்த்த இடத்திலேயே குள்ளன் உட்கார்ந்திருப்பதைக் கவனித்தான். குடிசைச் சுவரின் பக்கத்தில் தானும் உட்கார்ந்து உறையூர்ச் சாலையைக் கவனிக்கலானான். ஏதோ முக்கியமான சம்பவம் நடக்கப் போகிறதை எதிர்பார்த்து அவனுடைய உள்ளம் பெரிதும் பரபரப்பை அடைந்திருந்தது.

'டக்டக்' 'டக்டக்' என்று குதிரைக் குளம்பின் சத்தத்தைக் கேட்டு பொன்னன் விழிப்புடன் நிமிர்ந்து உட்கார்ந்தான். ஆம்; உறையூர்ப் பக்கத்திலிருந்துதான் அந்தச் சத்தம் வந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் குதிரை அருகில் வந்துவிட்டது. அதன் மேல் அமர்ந்திருப்பது சாக்ஷாத் மாரப்ப பூபதிதான் என்று நட்சத்திர வெளிச்சத்தில் பொன்னன் தெரிந்து கொண்டான். நடுச் சாலையில் நின்ற குள்ளனருகில் வந்து குதிரையும் நின்றது.

(தொடரும்)

தனக்கு ஏற்பட்டிருக்கும் பார்வைக் குறைபாட்டைக்கூட ஒரு பொருட்டாக எண்ணாமல், அக்குப்பஞ்சர் சிகிச்சையின் மூலம், சக மனிதர்களின் குறைகளைப் போக்கிக் கொண்டிருக்கிறார் கோவை இளைஞர் நவல் கிருஷ்ணன்...

''நவல் கிருஷ்ணன், பிறந்தப்ப பார்வை நல்லாவே தெரிஞ்சது. நாலு மாசக் குழந்தையா இருந்தப்ப மணல் வாரி அம்மை கண்டுச்சி. அது வடிஞ் சதுக்கப்புறமா, அவனோட ரெண்டு கண் களையும் பார்க்கவே விகாரமாயிடுச்சு. அப்ப அவனுக்குப் பார்வை இருக்கா இல்லையான்னே கண்டுபிடிக்கவே முடியல.

இந்தச் சமயத்துல அவனோட அப்பா, வீட்டை விட்டு எங்கேயோ போயிட்டார். ரெண்டு புள்ளைக்கும் கஞ்சி ஊத்துறதா? பையனோட கண்களுக்கு வைத்தியம் பார்க்



குறதா? எனக்கு ஒன்னுமே விளங்கலை. அப்புறமா சென்னை, எழும்பூர் கண் ஆஸ்பத்திரிக்குக் கூட்டிக்கிட்டுப் போனேன். அங்க ஆபரேஷன் மூலமா கண்ல இருந்த நீரை எல்லாம் வெளி யேத்திட்டாங்க. ஆனா, பார்வை நரம்பு கள் கெட்டுப் போனதால, முழுசாவே கண் பார்வை இல்லாம போயிடுச்சு. பார்வையற்றோர் பள்ளியில் படிக்க வைச்சேன்.

இன்னைக்கு வீடு தேடி வர்ற நாலு ஏழை பாழைங்களுக்கு, அவன் கத்துக் கிட்ட அக்குப்பஞ்சர் மருத்துவத்தை இலவசமா செஞ்சுக்கிட்டு இருக்கான்!'' என்று நெகிழ்கிறார், பார்வையற்ற நவல் கிருஷ்ணனின் தாய் கஸ்தூரி. கோவை, மேட்டுப்பாளையம் சாலையில் வசித்து வருகிறது இந்தக் குடும்பம்.

''பார்வையற்றோர் பள்ளியில ப்ளஸ் டு பாஸ் பண்ணினேன். கோவை, ராம கிருஷ்ணா மிஷின் வித்யாலயாவுல ஊது பத்தி, ஃபினாயில், சொட்டு நீலம், கம்ப் யூட்டர் சாம்பிராணி இதெல்லாம் தயா ரிக்கிறது எப்படின்னு பயிற்சி எடுத்துக் கிட்டேன். ஊதுபத்தி, கம்ப்யூட்டர் சாம் பிராணி எல்லாம் விற்கப் போனப்ப.

# அதிசய

ஆபீஸ், கடைகள்னு அலைஞ்சு அவுங் கள வாடிக்கையாளரா மாத்திக் கிட்டேன்.

தினமும் நூறு - நூத்தைம்பது லாபம் கிடைச்சது. வருமானமும் வாழ்க்கையும் நல்லாத்தான் நடந்துக் கிட்டு இருந்திச்சு. ஆறேழு வருசத்துக்கு முன்னாடி, எனக்கு மூல நோய்த் தொந் தரவு ஆரம்பமானது. ஒரு வருஷம் அதனால ரொம்பக் கஷ்டப்பட்டேன். ஒரு தடவை சென்னைக்கு வந்திருந்தப்ப சென்ட்ரல் ஸ்டேஷன் பாத்ரூம்ல ரத்தப் போக்கு அதிகமாகி எனக்கு மயக்க மாய்டுச்சு.

என்னோட கைத்துணைக்கு வந்திருந் தவர், என்னை அக்குப்பஞ்சர் ஆஸ்பத் திரியில அட்மிட் பண்ணினார். டாக்டர் சித்திக் ஜமால் எனக்கு அக்குப்பஞ்சர் வைத்தியம் பண்ணினார். இன்னைக்கு

# கிருஷ்ணன்!


✱ கஸ்தூரி

வரைக்கும் எந்தத் தொந்திரவு வரலை. அப்பதான் எனக்குத் தோணிச்சு. இந்த அருமையான மருத்துவத்தை நாம கத்துக்கிட்டு, கஷ்டப்படுற ஏழைங்களுக்கு இலவசமா பார்த்தா என்னன்னு?

காரைக்குடி பிரபல அக்குப்பஞ்சர் மருத்துவர் அப்துல்லா சேக் மூலமாக, மூன்று வருடங்கள் அக்குப்பஞ்சர் சிகிச்சை பயிற்சி பெற்றேன். அக்குப்பஞ்சர் மருத்துவராக 2004ல் சான்றிதழ் பெற்றேன். அன்னையிலேர்ந்து வீடு தேடி வர்ற ஏழை ஜனங்களுக்கு, அக்குப்பஞ்சர் சிகிச்சையை இலவசமா செஞ்சு வர்றேன்'' என்று கிருஷ்ணன் நம்மிடம் பேசிக்கொண்டிருந்த நேரத்தில், ஊட்டி பகுதியிலிருந்து ஒரு விவசாயி அக்குப்பஞ்சர் மருத்துவ சிகிச்சைக்காக வந்தார்.

''ஊட்டி பகுதியில் பைக்காரா அணை அருகே ஹனுமந்தாபுரம் கிராமம் என்னுடைய ஊர். நான் ஒரு விவசாயி. எனக்கு நாலு வருசமா தொண்டை வலி இருந்துச்சு. மாத்திரை சாப்பிட்டால், பத்து நாள் வலி இருக்காது. அப்புறம் வந்துடும். கேன்சர் நோயா இருக்குமோனு பயம் வேற. மொத்தம் எட்டு வாரம் தொடர்ந்து வரச்சொல்லி கிருஷ்ணன் மருத்துவம் பார்த்ததுக்கு அப்புறம்தான் சரியாச்சு'' என்று கூறிய விவசாயின் பெயரும் கிருஷ்ணன்தான்.

சாப்பாட்டுக்கு என்ன பண்றீங்க என்று நவலிடம் கேட்டால், ''அக்குப்பஞ்சர் ஊசிகளுக்கான செலவுத் தொகை மட்டும் வாங்கிக்கறேன். எப்பவும் போல ஊது பத்தி - கம்ப்யூட்டர் சாம்பிராணி வித்துட்டு வர்றேன்!'' என்கிறார்.

*செய்திச் சித்திரம் : திருநாவுக்கரசு*

# கலகம் பிறந்தது எனக்காக - 13

ஏகத்தாளமான பேச்சுகள், எக்குத்தப்பான குற்றச்சாட்டுகள், தடாலடி அறிக்கைகள், எமர்ஜென்சி காலத்து அரசியல்வாதியான சுப்ரமணிய சுவாமிக்கு இவைதான் அடையாளங்கள். கருத்துக் கந்தசாமியான இவர், போஃபர்ஸ், டான்சி பற்றிப் பேசுவார். சேதுத் திட்டத்தைச் சிக்கலில் தள்ளுவார். சசிகலாவைச் சகட்டுமேனிக்குத் திட்டுவார். சோனியா மீது சீறி விழுவார். பா.ஜ.க.வைப் பாடாய்ப்படுத்துவார்.

ஆனாலும், சுவாமியின் திருவிளையாடல்களை ரசிப்பதற்கென்றே ஒரு ரசிகர் கூட்டம் இருக்கிறது. சுவாமி செய்த ஒரு காரியம் மத்திய அரசையே குப்புறத் தள்ளிவிட்டது. ஆம்... ஒரேயொரு டீ பார்ட்டி மூலம் இதைச் சாதித்தார் சுவாமி.

மார்ச் 29, 1999, திங்கள் கிழமை. டெல்லியில் இருக்கும் ஹோட்டல் அசோகாவில் தேநீர் விருந்து. டெல்லி வந்திருந்த ஜெயலலிதாவுக்காக சுவாமி கொடுத்த விருந்து அது. நூறுக்கும் மேற்பட்ட பிரபலங்களுக்கு அழைப்பு விடுத்திருந்தார் சுவாமி. மாலை ஆறு மணிக்கே ஹோட்டல் அசோகா களைகட்டத் தொடங்கியது. நரசிம்மராவோடு சந்திரசேகர் கைகுலுக்கிக் கொண்டிருந்தார். தேவேகௌடாவோடு மன்மோகன்சிங் அளவளாவிக் கொண்டிருந்தார். நிறைய பிரபலங்கள். முக்கியமாக ஜெயலலிதா.

திடீரென அங்கே சலசலப்பு. 'சோனியா வருகிறார்' என்று கிசுகிசுப்புக் கேட்டது. 'ஜெயலலிதாவுக்கான விருந்தில் சோனியாவா? அதுவும் எதிரெதிர் முகாமில் இருக்கும்போது?' எல்லோருடைய கண்களிலும் ஆச்சரியக்குறிகள். விருந்து நடந்த அறைக்குள் நுழைந்தார் சோனியா. முகம் முழுக்கப் புன்னகையுடன் வரவேற்ற சுவாமி, அருகே இருந்த இருக்கையைக் காட்டி அமரச் சொன்னார்.

இருக்கையை நோக்கி நகர்ந்த சோனியாவுக்கு ஆச்சரியம். எதிரே ஜெயலலிதா. இருவரும் கைகுலுக்கினர். அருகருகே அமர்ந்து சில நிமிடங்கள் பேசிக்கொண்டிருந்தனர். ஏழு நிமிடங்கள் கழிந்திருந்தன. விருட்டென எழுந்தார் சோனியா. ஜெயலலிதாவைப் பார்த்துக் கைகூப்பினார். கிளம்பிவிட்டார்.

அவ்வளவுதான். சுவாமியின் முகத்தில் கொப்பளிக்கும் உற்சாகம். வெற்றிக் களிப்பில் திளைத்தார். எதிர்கால அரசியல் மாற்றங்களுக்கும் அணி மாற்றத்துக்கும் பிள்ளையார்சுழி போட்ட திருப்தி. சம்பவம் நடந்து கிட்டத்தட்ட ஒன்பது ஆண்டுகள் முடிந்த பிறகும், நினைவில் இருக்கும் அளவுக்கு எதைச் சாதித்தது இந்த டீ பார்ட்டி?



அ.தி.மு.க.வின் ஆதரவோடு இரண்டாவது முறையாகப் பிரதமராகியிருந்தார் வாஜ்பாய். அப்போது முன்னாள் கடற்படைத் தளபதி விஷ்ணு பகவத் சுமத்திய குற்றச்சாட்டுகளின்படி, பாதுகாப்புத் துறை அமைச்சராக இருக்கும் ஜார்ஜ் ஃபெர்னாண்டஸை, இலாகா மாற்ற வேண்டும் என்று நிர்ப்பந்தம் செய்தார் ஜெயலலிதா.

ஆனால், அதற்கு வாஜ்பாய் செவிசாய்க்காததால் ஜெயலலிதா ஆதரவை மறுபரிசீலனை செய்யும் முடிவுக்கு வந்திருந்தார். அப்போதுதான் சுவாமி குறுக்கே



# சுவாமி போட்ட பிள்ளையார் சுழி!

**ஆர்.முத்துக்குமார்**

புகுந்து டீ பார்ட்டி நடத்தி, அதில் பா.ஜ.க. அல்லாத தலைவர்களை ஒருங்கிணைக்கும் முயற்சியில் ஈடுபட்டார். இந்த டீ பார்ட்டிக்குப் பிறகே வாஜ்பாய் அரசுக்குக் கொடுத்து வந்த ஆதரவை ஜெயலலிதா வாபஸ் வாங்கினார். ஆட்சியும் கவிழ்ந்தது. அத்தனையும் சுவாமி புண்ணியம்.

உண்மையில் ஃபெர்னாண்டஸை இலாகா மாற்றுவது மட்டுமே ஜெயலலிதாவின் கோரிக்கை அல்ல; மதுரை தொகுதி எம்.பி.யான சுவாமியை நிதியமைச்சராக்க வேண்டும் என்பதுதான். இது முழுமையாய் நடக்காவிட்டாலும், வாஜ்பாய் அரசு கவிழ்ந்ததில் சம்பந்தப்பட்ட எல்லோருக்கும் பரம திருப்தி! இதுதான் சுவாமியின் பொலிட்டிகல் ஸ்டைல். இன்னமும் டீ பார்ட்டி என்றாலே அரசியல்வாதிகளுக்குக் கிலிதான்!

சுவாமியின் அரசியல் வாழ்க்கையில் கொஞ்சமும் நம்பமுடியாத பல விஷயங்கள் நடந்துள்ளன. ஜெயலலிதாவுக்காக மத்திய அரசையே கவிழ்க்கும் அளவுக்குக் களமிறங்கிய சுவாமியே, அவரை வழக்கு ஒன்றுக்காக விசாரிக்க வேண்டுமென்று ஆளுநர் சென்னா ரெட்டியிடம் அனுமதி வாங்கிய கதையும் நடந்திருக்கிறது.

ஜெயலலிதா முதன்முறையாக ஆட்சிக்கு வந்தபோது, கிண்டி தொழிற்பேட்டையில் இருக்கும் டான்சி நிறுவனத்துக்குச் சொந்தமான மூன்று ஏக்கர் நிலத்தை வாங்கினார். அரசு நிலம் என்பதால் அதை ஜெயலலிதா வாங்கியது தவறு என்று வழக்கு தொடரப்பட்டது. அதில் ஜெயலலிதாவை விசாரிக்க வேண்டும் என்று ஆளுநரிடம் அனுமதி பெற்றார் சுவாமி. பிறகு நடந்த வழக்கு விசாரணைகளில் சுவாமியே நேரில் ஆஜராகி ஜெயலலிதாவுக்கு எதிராக வாதாடினார்.

இதற்கிடையே சுவாமிக்கும் ஜெயலலிதாவுக்கும் நட்பு துளிர்த்துவிடவே, வழக்கில் பல்டி அடித்துவிடுவார் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், சுவாமி அப்படிச் செய்யவில்லை. வழக்கு முடிவதற்குள் ஜெயலலிதாவை ஆட்டிப்படைத்து விட்டார் சுவாமி.

இதுமட்டுமா, தம்முடைய நெருங்கிய நண்பரின் மனைவி என்று சொல்லிக்கொண்டே, சோனியா மீது சுவாமி தொடுத்த விமர்சன அம்புகள்...

(அடுத்த இதழில்)

# அருள்வாக்கு

# தர்ப்பணம்

ஒருவர் பையனைப் பட்டணத்தில் படிக்க வைத்திருந்தார். அவன் பரீட்சைக்குப் பணம் கட்ட வேண்டியிருந்தது. அதுவும் மறுநாளே கட்ட வேண்டியிருந்தது. உடனே அப்பாவுக்கு, 'தந்தி மணியார்டரில்' பணம் அனுப்பு என்று எழுதினான். அப்பாவுக்கு தந்தியும் மணியார்டரும் தனித்தனியாகத் தெரியும். பிள்ளையோ 'தந்தி மணியார்டர்' அனுப்பும்படி எழுதியிருந்தான். அப்பா, தபாலாபீஸுக்குப் போனார். ரூபாயைக் கொடுத்துவிட்டு 'தந்தி மணியார்டர் பண்ண வேண்டும்' என்றார். அவர், தபாலாபீஸ் குமாஸ்தா, ரூபாயில் ஓட்டை பண்ணித் தந்திக் கம்பியில் கட்டி அனுப்புவார் என்று எண்ணினார். ஆனால், பணம் வாங்கிக்கொண்ட குமாஸ்தா ரசீது கொடுத்துவிட்டு, ''சரி உம்முடைய பணம் சேர்ந்துவிடும்; அனுப்பியாகிவிட்டது'' என்றார். குமாஸ்தா பணத்தை வாங்கிப் பெட்டியில் போட்டதையும், ஓட்டை பண்ணிக் கம்பியில் கோக்காமலிருப்பதையும் பார்த்த அப்பாக்காரர், ''என் பணம் இங்கேதானே இருக்கிறது? அதில் ஓட்டை ஒன்றும் போட்டு அனுப்பவில்லையே! அது எப்படிப் போய்ச் சேரும்?'' என்று கேட்டார். ''அது போய்ச சேர்ந்துவிடும்'' என்று மறுபடியும் குமாஸ்தா சொன்னார். 'கட்டுக் கடகட' என்று தந்தியும் அடித்தார். 'ஏதோ லொட்டுலொட்டென்று சப்தம் பண்ணுகிறான்; சேர்ந்துவிடும் என்று சொல்கிறான். ரூபாய் இங்கேயே இருக்கிறது. லொட்டு லொட்டென்று கட்டையை இங்கே அடித்தால் அங்கே எப்படிப் போய்ச் சேரும்?' என்று அப்பாவுக்குச் சந்தேகம் வந்துவிட்டது.

ஆனாலும் பணம் போய்ச் சேர்ந்துவிட்டது.

தர்ப்பணம் முதலியன பண்ணுவதும் அந்த மாதிரியே ஆகும். நாம் எதைக் கொடுத்தாலும், அதற்கான சட்டப்படி கொடுக்க வேண்டும். சாஸ்திரம் என்கிற சட்டம் விதித்தபடி நாம் கொடுப்பதைத் தெரிந்துகொள்கிற பிதுர் தேவதைகள், அது யாருக்குப் போய்ச் சேர வேண்டுமோ அவர்களுக்குச் சேர்த்துவிடுவார்கள்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**



* மீசைக்குள் ஒளிரும் குழந்தைச் சிரிப்பு...

# குழந்தைகள்

**கல்கி ராஜேந்திரன்**

கலைஞரின் சிரித்த முகத்துடன் இந்திய சுற்றுலா தொழில் பொருட்காட்சி விளம்பரம் பத்திரிகைகளில் இடம் பெற்றுள்ளது. 'பொருட்காட்சி விளம்பரத்தில்கூட முதல்வருக்கு பப்ளிசிடியா?' என்று கேட்டால், 'அவரே விளம்பரம் மூலம் அழைப்பது பொருட்காட்சிக்கு வருகை தருவோருக்கு அளிக்கப்படும் கௌரவம்' என்று சுற்றுலா துறை பதிலளிக்கக் கூடும்!

இப்போது சென்னை, தீவுத்திடலில் அமைந்துள்ளது போன்ற பொருட்காட்சி முன்பெல்லாம் தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் (தற்போது காமராஜர் அரங்கம் உள்ள இடம்) நடக்கும், ஆண்டுக்கு ஒரு முறை. அத்தகைய ஒரு சமயத்தில் ரசிகமணி சென்னைக்கு வந்து எங்கள் வீட்டில் தங்கியிருந்தார். நானும் சகோதரி ஆனந்தியும் 'காங்கிரஸ் எக்ஸிபிஷ'னுக்கு அழைத்துப் போகுமாறு அவரிடம் கோரிக்கை வைத்தோம். 'அப்பாவுக்கு இதற்கெல்லாம் நேரமே இருப்பதில்லை' என்று புகார் செய்தோம்.

''எக்ஸிபிஷன் போகணுமா?'' என்று எங்களைவிடவும் ஆர்வத்துடன் ஆரம்பித்த டி.கே.சி. மாமா, ''ஆமா! போகத்தானே வேணும்! பள்ளிக்கூடம் போறதைவிட எக்ஸிபிஷனுக்குப் போறது எவ்வளவோ நல்ல காரியமாச்சே!'' என்றார். எங்களுக்கு உற்சாகத்தில் தலை கால் புரியவில்லை. ''ராதா, விஜயா, தங்கம், அம்பி, அனந்த் எல்லாரும் தயாரா?'' என்று 'கல்கி' - சதாசிவம் வீட்டுக் குழந்தைகள் அனைவரையும் பட்டியலிட்டுக் கேட்டார்.

ரசிகமணி குழந்தைகளுடன் எக்ஸிபிஷன் போக விரும்புவதாகத் தெரிய வந்ததும் சதாசிவம், கார் டிரைவருக்கு ஏற்பாடு செய்துவிட்டார். பொருட்காட்சியை ஆசை தீரச் சுற்றிப் பார்த்தோம். இருப்பினும் ஒரே ஓர் அம்சம் மட்டுமே அறுபத்திரண்டு ஆண்டுகளுக்குப் பிறகும் பசுமையாக நினைவிருக்கிறது: ஒரு சிறிய கூடாரம். வெளியே 'தாமரைப் பெண்' என்று பெயர்ப் பலகை. 'பேசும், சிரிக்கும் தாமரைப் பெண்ணைக் காண வாருங்கள்! கட்டணம் 4 அணா மட்டுமே!' (இன்று 25 பைசா).

எங்கள் ஆசையைப் புரிந்துகொண்ட டி.கே.சி. மாமா டிக்கெட் எடுத்து கூடாரத்துக்குள் அழைத்துப் போனார். ஒரு மேஜை மீது மலர்ந்த தாமரையும் அதன் மையத்தில் புன்னகை பூத்த பெண் முகமும் காணப்பட்டன. கட்டி, மாட்டல், ஜிமிக்கி எல்லாம்

அணிந்த அழகிய முகம். உடலைக் காணோம்! தலையை மட்டும் கழற்றி வைத்தது போல தோற்றம்!

''உன் பெயர் என்ன?''

''தாமரைக் கன்னி!''

''எங்கிருந்து வந்தாய்?''

''பத்மலோகத்திலிருந்து!''

''அது எங்கிருக்கு?''

''ஏழு கடல் தாண்டி!''

என்றபடியாகக் கேள்விகளுக்குப் பதில் கூறி வந்தது அந்த முகம்! எங்களுக்கு ஆச்சர்யமான ஆச்சர்யம்!

ரசிகமணி சிரித்தார். ''இது எப்படி தெரியுமில்லே?'' என்று கேட்டவாறே 'வாக்கிங் ஸ்டிக்'கால் தரை மணலில் கோடுகள் இழுக்க ஆரம்பித்தார். ''ஸார்! ஸார்!'' என்று வித்தை காட்டி வந்தவர் கெஞ்ச ஆரம்பித்தார். ''தயவுசெய்து வெளியே போய்ப் பேசறீங்களா?''

**அ**வர் கோரிக்கைக்கு மதிப்பளித்த ரசிகமணி எங்களை அழைத்துக்கொண்டு வெளியே வந்தார். ஒதுக்குப்புறமான இடத்தில் நின்று மறுபடி மணலில் கோடுகள் இழுத்து விளக்கினார் : ''மேஜையின் இரு முன்னங்கால்களுக்குப் பின்னால் ஒரு நிலைக்கண்ணாடி இருக்கு. நிலைக் கண்ணாடிக்குப் பின்னால் அந்தப் பெண் ஸ்டூல் போட்டு வசதியாக உட்கார்ந்திருக்கிறாள். எனவே அவள் உடலை நாம் பார்க்க முடியலை. முன் கால்களை நிலைக் கண்ணாடி பிரதிபலிக்க, அவற்றை மேஜையின் பின் இரு கால்கள் என்று நாம் எண்ணிக்கொள்கிறோம். மேஜையில் ஒரு பெரிய துளை போட்டு அதன் வழியே பெண்ணின் தலை மட்டும் உயர்ந்திருக்கிறது. ஓட்டை தெரியாதவாறு அவள் கழுத்தைச் சுற்றி செயற்கைத் தாமரை மறைக்கிறது. நிலைக்கண்ணாடி விளிம்புகள் தெரியாதவாறு 'டேபிள் க்ளாத்' விரிக்கப்பட்டிருக்கிறது. தலையை மட்டும் நாம் மேஜைமேல் காணும்போது திகைக்கிறோம். அது பேச வேறு செய்யுதா! ஒரே வியப்புதான்!''

டி.கே.சி. மாமா ரகசியத்தை விண்டுரைத்ததும் குழந்தைகளாகிய எங்களுக்கு ஒரே சிரிப்பு! 'நிலைக்கண்ணாடிக்கு முன் ஒரு பொருள் எவ்வளவு தூரத்தில் இருக்கிறதோ, அவ்வளவு தூரம் பிரதிபிம்பத்திலும் தள்ளி இருக்கும்; முப்பரிமாணத் தோற்றம் கிடைக்கும்' என்ற விஞ்ஞான உண்மையையும் கற்றுத் தந்தார், டி.கே.சி. மாமா.

# ரசித்த ரசிகமணி

**ரா**ஜாஜியுடன் சம்பாஷணை மட்டுமல்ல சம்வாதமும் புரியக்கூடிய அறிவுக் கூர்மையுள்ளவர்; 'கல்கி'யின் எழுத்துக்கு கிரியாஊக்கியாக விளங்கியவர்; ரசிகமணியாக எம்.எஸ்.ஸின் இசையை அனுபவித்து மகிழ்ந்தவர்; பிறமொழி இலக்கியங்களை நன்கறிந்த துணிவுடன் கம்பனை உலக மகாகவியாக அனைவருக்கும் உணர்த்தியவர்; தமிழ்க் கலைகளின் மறுமலர்ச்சிக்கு வித்திட்டு வளர்த்தவர்தான் குழந்தைகளிடம் குழந்தையாக, குதூகலமாகப் பழகினார்.

குற்றாலத்திலிருந்து டி.கே.சி. மாமா வந்துவிட்டால் எங்களுக்குக் கும்மாள



● குழந்தையோடு குழந்தையாய் டி.கே.சி. உடன், ராஜாஜி, சதாசிவம்

ஸம்தான். 'பாமா கர்வ பங்கம்' நாடகம் போடப் போவதாக அறிவித்தோம். சதாசிவத்தின் மருமான் மங்களம் அக்கா தான், கதை, வசனம், பாட்டு, மெட்டு, டைரக்ஷன் எல்லாமே! "குழந்தைகள் நாடகம் போடப்போறாங்க; என்ன வேலை இருந்தாலும் நிறுத்தி வைத்துவிட்டு நாலு மணிக்கு வந்துவிட வேண்டியது" என்று டி.கே.சி. உத்தரவு போட்டார். அவர் சொல் லுக்குக் கட்டுப்பட்டு பெரியவர்கள் எல்லோரும் ஆஜராகிவிட்டனர்!

நான் நாரதர் வேஷமணிந்து, "புருஷ புருஷ ரதேதி ரசனே" என்று கர்ணகடூரமாக பாடிக்கொண்டே வந்து, 'ரசனே'யில் ஓர் உலுக்கல் சங்கதி உதிர்த்ததும் எம்.எஸ். 'பேஷ்' போட்டு 'களுக்'கென்று சிரித்தார்! எனக்கு உச்சி குளிர்ந்துவிட்டது.

சகோதரி ஆனந்தியும் நானும் பல நாடுகளின் தபால் தலைகள் சேகரிப்போம்; வத்திப்பெட்டி லேபிள்கள் சேகரிப்போம்; விதம் விதமான இலைகளைச் சேகரிப் போம். இவை போதாதென்று குழந்தை களின் படங்களை எந்தப் பத்திரிகையில் கண்டாலும் அதைக் கத்தரித்து ஒரு பெரிய நோட்டுப் புத்தகத்தில் ஒட்டி 'பேபி பிக்சர் ஆல்பம்' தயாரிப்போம். ஒரு சமயம் அந்த ஆல்பத்தை டி.கே.சி. மாமாவிடம் காண் பித்தோம். அழுகிற, சிரிக்கிற, விஷமம் பண்ணுகிற, விளையாடுகிற பல்வேறு குழந்தைகளின் படங்களை, பக்கங்களைப் புரட்டி ரசித்துப் பார்த்தார். வெற்றிடமாக இருந்த முதல் பக்கத்தில்,

'தாய்ப்பூ, தாமரைப்பூ;
தங்கத்து வீட்டு செண்பகப் பூ!'

என்று ஒரு நாட்டுப் பாடலை எழுதி டி.கே.சி. என்று கையெழுத்திட்டுத் தந்தார்.

மற்றொரு தருணத்தில் நான் பரீட்சைக் காக மனப்பாடம் செய்ய வேண்டிய கம்பன் கவிதையை உருப்போட்டுக்கொண் டிருந்தேன். "கிள்ளையொடு பூவை அழுத.. கிள்ளையொடு பூவை அழுத... கிளர்மாடத்துள் உறையும்... கிளர்மாடத் துள் உறையும்..."

டி.கே.சி. மாமா கேட்டுக்கொண்டே வந்துவிட்டார். "என்ன படிச்சிக? கம்பன் கவிதையா? வாத்தியான் சொன்னானா? தீயை வை!" என்று கோபமாகக் கூறி, திரும்பிப் போய்விட்டார். எனக்கு ஒன்றும்

புரியவில்லை.

அன்று மாலை சதாசிவம், எம்.எஸ்., 'கல்கி', என் தாயார் ருக்மிணி மற்றும் சில நண்பர்கள் குழுமியிருக்க, டி.கே.சி. ஒரு சிறிய முன்னுரைக்குப் பிறகு ஒரு கம்பன் பாட்டு சொன்னார்.

மான் இனம் வருவ போன்றும்
மயில் இனம் திரிவ போன்றும்
மீன் இனம் மிளிர வானில்
மின் இனம் மிடைவ போன்றும்
தேன் இனம் சிலம்பி ஆர்ப்ப
சிலம்பு இனம் புலம்ப எங்கும்
பூ நனை கூந்தல் மாதர்
'பொம்'மெனப் புகுந்து மொய்த்தார்

பாடலைப் பதம் பிரித்து எளிய மெட்டில் அமைத்து டி.கே.சி. ரசனையோடு பாடும்போதே பொருள் விளங்கிவிடும். மின் இனம் என்று அவர் கூறும்போது மின்னல் பளிச்சிடும்; 'பொம்'மென என்று சொல்லும்போது ராமனைக் காணத் துடிக்கும் ஆர்வம் தெறிக்கும்.

கவிதையைக் கூறி முடித்ததும் டி.கே.சி., "இப்படி ஓர் அற்புதமான பாடலை இயற்றிய கம்பன், 'கிள்ளையொடு பூவை அழுத' என்றும் கற்பனை செய்திருக்க முடியுமா? பாவம், ராஜேந்திரன், பரீட்சை எழுதுவதற்காக எதை எதையோ படிக்க வேண்டியிருக்கே!" என்று அனுதாபப்பட்டார். அப்போதுதான் ரசிகமணி, கம்பராமாயணப் பாடல்கள் ஒவ்வொன்றையும் கண்டிப் பார்த்து, சில பாடல்கள் கம்பன் எழுதியவையே அல்ல; இடைச் செருகல் என்று ஒதுக்குகிறார் என்ற விவரம் எனக்குத் தெரியவந்தது. சில பண்டிதர்களுக்கு இதனால் அவர் மீது கோபம் என்பதும் புரிந்தது.

**பா**லகாண்டம் உலாவியற் படலத்தில் இடம் பெற்றுள்ள அந்தக் கவிதையை டி.கே.சி. சொல்லக் கேட்ட 'கல்கி', எம்.எஸ். அவர்களை அதற்கு மெட்டமைத்துப் பாடும்படி கேட்டுக்கொண்டார். தமது மகள் ஆனந்திக்கும், சதாசிவம் - எம்.எஸ். அவர்களின் மகள் ராதாவுக்கும் நடனம் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்த வழுவூர் ராமையா பிள்ளையை அழைத்து, இந்தப் பாடலின் நயங்களை விளக்கினார். அபிநயம் அமைக்கும்படி கேட்டுக் கொண்டார். அதே உலாவியற் படலத்திலிருந்து இன்னொரு பாடலையும் டி.கே.சி. எடுத்துக் கொடுத்தார். 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்று தொடங்கும் அந்தப் பாடலும் நடன உருவம் பெற்றது.

முதன்முதலாக கம்பன் பாடல்கள் இசை - நாட்டிய வடிவங்கள் பெற்று அரங்கேறின. கேதார கௌளையிலும் பின்னர் கல்யாணி ராகத்திலும் எம்.எஸ். பாட, ஆனந்தி - ராதா அபிநயித்தார்கள். ரசிகமணி முதல் வரிசையில் அமர்ந்து கண்டுகளித்தார்.

**இ**வ்வளவு அன்பாகப் பழகிய டி.கே.சி. மாமா ஊருக்குப் புறப்படுகிறார், குற்றாலம் திரும்புகிறார் என்றால் குழந்தைகளாகிய எங்களுக்கு வருத்தமாகத்தானே இருக்கும்? "எதுக்கு மாமா போறேள்?" என்று ஆனந்தி துயரம் தோய்ந்த குரலில் கேட்க, டி.கே.சி., அடர்ந்த மீசையால்கூட மறைக்க முடியாத பெரிய புன்னகையுடன், "எதற்குப் போகிறேனா? இது தெரியாதா? திரும்பி வருவதற்காகத்தான்!" என்றார்.

உண்மைதானே! பிரிந்தால்தானே மீண்டும் சந்திப்பதன் மகிழ்ச்சியை உணர முடியும்!

எனவே, நானும் மீண்டும் சந்திக்கும் வரை நேயர்களிடம் விடைபெறுகிறேன்; வணக்கம்.

***(விரைவில் பேசுவேன்...)***



**மேஷம்:** மன தைரியம் மிகுந்து காணப்படும். கல்வி வளம் மேலோங்கும். பூர்வீகர் சொத்து பாகப்பிரிவினை ஆகும். நெருங்கிய கூட்டாளிகள் விலகிப் போவார்கள். வேலையில் நற்பெயர் கிட்டும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**ரிஷபம்:** வேலைப்பளு அதிகரிக்கும். மனக் குழப்பம் விலகும். கல்வியில் அக்கறை எடுத்துப் படிக்கவும். மறைமுக விரோதிகள் இருப்பார்கள். உடல் ஆரோக்கியம் சீராகும். பணத் தேவைகள் அதிகமாகும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

திருமணத் தடை விலகும். மனக்குழப்பம் தீரும். நீண்ட கால பிரச்னை முடிவுக்கு வரும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். எதிர்பாராத உதவிகள் வந்து சேரும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கன்னி:** தடை விலகித் திருமணம் நடக்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். வியாபாரத்தில் லாபம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். தூரதேசப் பிரயாணம் வந்து சேரும். குழந்தைகள் மூலம் மன மகிழ்ச்சி ஏற்படும். சனி / குரு / வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மிதுனம்:** சுப காரிய நிகழ்ச்சிகள் கைகூடும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். கடல் கடந்த மனிதர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். பரிகாரம் தேவையில்லை.

**கடகம்:** வாக்குவாதம் தவிர்க்கவும். வாகனங்களில் செல்லும்போது கவனம் தேவை. தொழில் துறையில் சுமாரான போக்கு நிலவும். குடும்ப வாழ்வில் அனுசரித்துப் போகவும். குழந்தைகள் வழியில் சுபசெலவு வந்து சேரும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**சிம்மம்:** பண வருவாய் பெருகும்.

## தஞ்சை பரத்வாஜ்

**துலாம்:** சுபநிகழ்ச்சி கைகூடும். வேலையில் நற்பெயர் கிட்டும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். பொருளாதாரச் சிரமம் இருக்காது. வழக்கு வெற்றி அளிக்கும். புதிய சொத்து வந்து சேரும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். வராத நிலுவைகள் வசூலாகும். ராகு / கேது / குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம்:** வாக்குவன்மை மேலோங்கும். நண்பர் / உறவினர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். திருமணக் காரியம் நிறைவேறும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் ஏற்படும். வீடு / மனை வாங்க ஏற்ற தருணம். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**தனுசு:** கடன் சுமை குறையும்.




## 30.03.08 முதல் 05.04.08 வரை

திருமணக் காரியம் கைகூடும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். சத்ரு தொல்லை ஒழியும். கல்வி வளம் மேலோங்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். நீண்டகாலம் முடிவு பெறாமல் இருந்த வழக்கு வெற்றி அளிக்கும். குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மகரம்:** வாக்குவாதம் தவிர்க்கவும். உடல் நிலையில் கவனம் தேவை. நெருங்கிய கூட்டாளிகளை விட்டு விலக நேரிடும். வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. வியாபாரத்தில் மந்தமான சூழ்நிலை ஏற்படும். திருமணத் தடை ஏற்படும். ராகு / கேது / சனி / குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கும்பம்:** சுப காரிய நிகழ்ச்சி கைகூடும். மனக் குழப்பம் தீரும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். வீடு / மனை வாங்க ஏற்ற தருணம். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. ஆடை ஆபரணப் பொருட்கள் வாங்குவீர்கள். நண்பர், உறவினர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மீனம்:** மனபிரம்மை தீரும். பணவரவு பெருகும். கல்வி வளம் மேலோங்கும். வாகன யோகம் உண்டாகும். பொருளாதார முன்னேற்றம் ஏற்படும். அயல் நாட்டு மனிதரால் அனுகூலம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வேலையில் உயர்வு உண்டாகும். குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.



# விவாத மேடை

# வாத்தியார்

கருமேகம் மிரட்டிக் கொண்டிருந்த ஒருவேளையில் கரந்தை உமாமகேசுவரனார் கல்வியியல் கல்லூரிக்குத் திடீர் 'விசிட்' அடித்தோம்.

'கல்கி' இதழுக்காக கொஞ்சம் உருப்படியாகப் பேசுங்கள் என்றதும், நதியா, ராதா, தீபலெட்சுமி, காயத்ரி, இரண்டு 'அனிதா'க்கள், விஜயலெட்சுமி... என்று வருங்கால 'மேம்'களும் 'மிஸ்'களும் வரிசையாக வந்தனர். அறிமுகம் நடந்துகொண்டிருக்கும்போதே மேனகா, ஜெயந்தி, ரமாதேவி, திலகவதி ஆகியோர் செந்தில் வடிவு தலைமையில் திரண்டு வந்தனர்.

நாமும் களத்தில் இறங்கினோம். ''ஆசிரியர்கள் குழந்தைகளை அடிக்க குச்சியை எடுப்பது சரியா?'' என்று கூட்டத்தில் ஒரு தீக்குச்சியைக் கொளுத்திப் போட்டோம். அது பரவிய விதத்தைப் படித்துத் தெரிந்துகொள்ளுங்களேன்...

''குழந்தைகளைத் தட்டிக் கொடுத்துதான் புரிய வைக்கணும்; கொடுக்கற தண்டனையோட தாக்கம் தவறை திருத்திக்கிற மாதிரி இருக்கணும். அதுக்கு எதுக்கு குச்சி?'' என்று ஜெயந்தி மென்மையாகத் துவக்கி வைத்தார். அதற்கு, ''சார்! போலீஸ்காரங்க கையில இருக்கற தடியும், ஆசிரியர் கையில இருக்கற தடியும் சரியா வேலை செய்யலைன்னா அரசின் செங்கோல் வளையும்ன்னு சொல்லி இருக்காங்க'' என்று விவாதத்துக்குச் சூடு வைத்தார் செந்தில் வடிவு.

''முதல்ல காமெடியா பாடம் நடத்தணும்; மாணவனோடு மாணவனா ஒன்றி இருந்தா தண்டனைக்கு எது வேலை?'' இது தீபலெட்சுமியின் கேள்வி.

''பசங்க அப்படித்தான் வால்தனம் பண்ணுவாங்க; அவங்க வயசு அப்படி; சைக்கலாஜிக்கலா அவங்கள டீல் பண்ணணும்'' என்று ஐடியா கொடுத்தார் எஸ்.அனிதா. பிரச்னையின் தன்மையைப் பொறுத்து குச்சி எடுக்க வேண்டிய இடங்களும் உண்டு என்பது நதியாவின் கருத்து. ஆனால், ராதாவின் கருத்து வேறாக இருக்கிறது... ''மாணவன் செய்த தவறை உணர்த்த வேண்டிய பொறுப்பு ஆசிரியருக்கு உள்ளது. அது குச்சியின் மூலம் நிகழாது'' என்றார்.

''சரி... எப்படித்தான் மாணவனை நல்வழிப்படுத்துவது?'' என்று விவாதத்தை இடைமறித்தோம் நாம்.

''நீ திருந்தணும்; அதுக்கு நீயே பனிஷ்மெண்ட் சொல்லு... அப்படீனு மாணவ

# அடிச்சா தப்பா?

யையே கேட்கலாம்'' - இது காயத்ரியின் மந்திரச் சொல். 'அகலாது அணுகாது தீக்காய்வார் போல்' என்ற குறளுக்கேற்ப ஆசிரியரின் செயல் இருக்க வேண்டும் - என்பது மேனகாவின் மேன்மைமிகு ஆலோசனை.

''நல்லொழுக்கக் கல்வி என்பதனை கட்டாயமாக்கினால் இதுபோன்ற பிரச்னைகளுக்கு வாய்ப்பில்லை'' என்றார் விஜயலெட்சுமி. ரமாதேவி இன்னும் ஆழமாகப் பேசினார்... ''எல்லோர் மத்தியிலும் ஒரு மாணவனை அவமானப்படுத்துவது அவனோட மனநிலையைப் பாதிக்கும்; தனியா அவனுக்கு ஆலோசனை வழங்கலாம்'' என்றார்.

'வார்த்தைகளுக்குக் கட்டுப்படற மாதிரி மாணவனை உருவாக்கணும். அதுக்கு நாம நல்ல பயிற்சி எடுத்துக்கணும்' என்று அனைவரையும் ஒருங்கிணைத்து திலகவதி பேசிக்கொண்டிருக்கும்போதே அனிதா அருமையாகக் கூறினார், ''குச்சி, பார்வைக்கு இருக்கட்டும்; அதை எடுக்க வேண்டாம்'' என்று.

உடனே நாம், 'நீயா? நானா?' பாணியில் தீர்ப்பு எதுவும் சொல்லாமல், ''எது எப்படியோ... வருங்காலங்களை வார்த்தெடுக்கிற பணி உங்களுக்கு; நீங்கள் முன்மாதிரியா இருக்க வேண்டியது அவசியம்'' என்பதை மட்டும் சொல்லி விவாதத்தை நிறைவு செய்தோம்.

- எம்.திரவியமுருகன்

# புள்ளிகள்... கோலங்கள்...

பட்டுதலம் சுகுமாரன்




கேட் திறக்கும் சத்தம். உடன் கார் ஓசை. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தான் குணசேகர்.

பொன்ராஜ் கார்... உள்ளே வந்து நின்றது.

அடுத்த நிமிஷம், அவர் ஆஃபீஸ் அறைக்குள் பிரவேசித்தார்.

''நீ எதுக்கு வந்தே?'' சிடுசிடுத்தார் பொன்ராஜ்.

''அண்ணா... உங்களுக்கு ஒண்ணு மில்லையே...?''

''எனக்கென்ன?''

''சொல்லாம கொள்ளாம போய்ட்டீங்க. அங்கே அண்ணி எப்படித் தவிச்சுப் போயிருக்காங்க தெரியுமா?''

''ஆமாமாம்... அவளுக்கு, புருஷன் இருபத்து நாலு மணி நேரமும் கண் எதிர்லயே இருக்கணும்...'' என்றபடி, கோட்டுக்குள் கைவிட்டு பழுப்பு நிறக் கவரை எடுத்து, டிராவைத் திறந்து உள்ளே வைத்துப் பூட்டி,

''கந்தசாமி...'' என்று விளித்தார்.

''அவனை வீட்டுக்கு அனுப்பிட்டேன். என்ன வேணும் அண்ணா...?''

அவர் யோசித்து...

''ஒண்ணுமில்லை. வீட்டுக்குப் போகலாம்'' என்றார்.

வீடு, விழித்துக்கொண்டிருந்தது.

அம்மா, மனைவி, தம்பி, அவன் மனைவி, மகள்... பொன்ராஜுக்கு வருத்தமாக இருந்தது.

''ஸாரி... போன இடத்துல கொஞ்சம் தாமதம். எதிர்பாராதவிதமா சிலரைச் சந்திக்க வேண்டியதாயிடுச்சு. மத்தபடி பிரச்னையெல்லாம் ஒண்ணுமில்லை. எல்லோரும் போய்ப் படுங்க...'' என்றவர், ''சுலேகா...'' மகளைப் பார்த்தார்.

''அப்பா...''

''என் அறைக்கு வா..'' என்று சொல்லிவிட்டு முன்னால் நடக்க...

சுலேகா, கேள்விக்குறியுடன் பின்னால் நடந்தாள்.

குணசேகர், தெருக்கதவை அடைத்துவிட்டு, அம்மாவை அழைத்துப்போய் அவர் அறையில் விட்டுவிட்டு, தன் போர்ஷனுக்குத் திரும்பினான்.

கோகிலாவைப் பார்த்து, பிறகு உத்தரத்தைப் பார்த்தான்.

''தூக்குப் போட்டுக்கலே?'' என்று கேட்டபடி உள்ளே போனான்.

எரிகிற நெருப்பில் எண்ணெய் வார்த்ததுபோல், 'குப்'பென்று பிழம்பாய்த் தகித்தாள் கோகிலா.

(தொடரும்)

ஒரு பக்கத் தொடர்

## சில்லென ஒரு சிற்றுலா

# வரவேற்கும்

கோடை விடுமுறைக்கு ஊட்டி? கொடைக்கானல்? அதையும் தாண்டி யோசிக்க விரும்புபவர்களை, கேரளா-தமிழ்நாடு எல்லையில் ஒய்யாரமாக அமர்ந்துகொண்டு, இருகரம் நீட்டி வெல்கம் பார்ட்டி கொடுக்கிறது தேக்கடி. பசுமையும் பரவசமும் குழுமியிருக்கும் பிராந்தியமான தேக்கடிக்கு எப்படிப் போவது? தேனி, சின்னமனூர் வழியாகப் பரிசுத்தமான காற்றைச் சுவாசித்தபடி குமுளிக்கு வந்து விடுங்கள். அங்கே ஜீப்புகளும் டவுன் பேருந்துகளும் தயாராகக் காத்துக்கொண்டிருக்கின்றன.

நமக்கு வசதியான ஒன்றில் ஏறிக்கொண்டால், நான்கே கி.மீ. பயணத்தில் தேக்கடியைத் தொட்டுவிடலாம். வழிநெடுக ஏலக்காய் மணமும் தேயிலை மணமும், காற்றில் மிதந்து வந்து நம்முடைய நாசியை வருடும். ஏலக்காய் ம குடித்த திருப்தியோடு தேக்கடியில் கால் பதிக்கலாம்.

தேக்கடியில் என்ன ஸ்பெஷல்? பாதைக்குக் கொஞ்சம் இடம் கொடுத்து விட்டுப் பச்சைப்பசேலென இருக்கும் தேயிலைத் தோட்டங்கள். நறுமணம் கமழும் ஏலக்காய் தோட்டங்கள். முக்கியமாக முல்லைப் பெரியாறு அணை. தண்ணீர் நிரம்பித் ததும்பும் ஏரி. புலிகள் காப்பகம், யானைகள் உறைவிடம், குரங்குகள் ஜிம்னேஷியம், பறவைகள் பி.ஜி.எம்...

'பென்னிகுவிக்' என்ற பிரிட்டிஷ் பொறியாளரின் மூளைக் குழந்தையே இந்த முல்லைப் பெரியாறு அணை. ஆபத்து அதிகம் என்பதால், கொஞ்சம் எச்சரிக்கையோடுதான் அணையை எட்டிப் பார்க்க முடியும். அணை நிரம்பி, வெளியே வழியும் நீரைச் சிந்தாமல் சிதறாமல் அள்ளிக் கொள்வதற்கு வசதியாக ஏரி ஒன்று உருவாக்கப்பட்டது. தற்போது, பச்சைப்பசேல் மலைகளுக்கு இடையே ஜிலுஜிலுவென பரந்துவிரிந்து காட்சியளிக்கிறது இந்த ஏரி.

இங்கே படகுப் பயணம் காலை ஏழு மணிக்கே தொடங்கிவிடும். ஒரு நாளைக்கு மொத்தமாகவே ஐந்து சவாரிகள்









# வனராணி!

தான் செல்லும் என்பதால், கூட்டம் அலைமோதும். பந்திக்கு முந்துவது போல படகுக்கும் முந்திவிடுவது சாலச் சிறந்தது.

ஏரியில் மிதந்தபடி அழகான இயற்கைக் காட்சிகளை ரசிக்கலாம். அலுப்புத் தட்டாது. ஒருவேளை தட்டினால், சமாளிப்பதற்கு வசதியாக ஏரிக்கு நடுவே, மினி அரண்மனை போல ஒரு ஹோட்டல் இருக்கிறது. அங்குபோய் வயிற்றை நிரப்பிக்கொண்டு கிளம்பிவிட வேண்டியதுதான்.

படகுச் சவாரியைத் தவற விட்டிருந்தால் யானையின் முதுகில் ஏறிக்கொண்டு, மகாராஜாவுக்குரிய படாடோபத்தோடு, பந்தாவாக வனப் பிரதேசத்தை ஜாலியாக வலம் வரலாம். யானையின் முரட்டு ரோமங்கள் குத்தாமல் இருக்க, குஷன் போன்ற துணியைப் போர்த்தியிருப்பார்கள். யானை மீது அமர்ந்துகொண்டு செல்லும் இரண்டு மணி நேர வன உலாவே வரப்பிரசாதம்.

கூடுதலாக, காட்டுக்குள்ளே இருக்கும் 'வாட்ச் டவரி'லிருந்து பார்க்கிறபோது புலிகளின் நடமாட்டம் காணக் கிடைத்தால் கிட்டத்தட்ட கடவுள் தரிசனம்!

இரவு முழுக்க பனிமழை பொழிந்துகொண்டிருக்கிறது. நடுங்க நடுங்க பனி இரவைக் கழிக்கும் யானைகள், விடிந்ததும் தங்கள் உடலைச் சூடேற்றிக்கொள்ள தேக்கடி ஏரிப்பக்கம் தலை காட்டுகின்றன. அங்கிருக்கும் மணலை எடுத்துத் தங்கள் உடலில் பூசிக்கொண்டு, குளிரைத் தணிக்கும் கண்கொள்ளாக் காட்சியை, மழலைப் பட்டாளங்கள் கூச்சல் போட்டு ரசிக்கலாம். தாகத்தைத் தணித்துக்கொள்ள, மான்களும் காட்டெருமைகளும் நீர்ப்பகுதியை நோக்கி வருவதையும் நீர் அருந்துவதையும் இமை கொட்டாமல் ரசிக்கலாம்.

டிசம்பர் மாதத்தில் தொடங்கும் தேக்கடி சீஸன் மே மாதம் வரை நீள்கிறது. அதிக செலவு, அதிக அலைச்சல் இரண்டும் இல்லாமல் பட்ஜெட்டுக்குள் அடங்கும் பரவச உலா வேண்டும் என்றால் அதற்குத் தகுந்த இடம் தேக்கடி!

– கலை

## காம்பிளான் கதை!

# வளம் சேர்க்கும்

பெயருக்கு ஏற்றபடி சாதித்துக் காட்டியிருக்கின்றனர் கோவை, மாதம்பட்டி கிராம 'கல்பனா சாவ்லா சுய உதவிக்குழு' பெண்மணிகள். இவர்கள் ஆரம்பித்திருக்கும் சிற்றுண்டி கடைதான் இப்போது கோவையின் ஹாட் டாப்பிக்.

''எங்க ஊர்ல எல்லாருமே கிடைக்கற கூலி வேலைக்குத்தான் போய்ட்டு இருந்தோம். ஒரு நாள் வேலை இருக்கும்; மறு நாள் இருக்காது. வர்ற வருமானத்துல குடும்பம் நடத்தறதே கஷ்டமா இருந்தது. அப்பத்தான் என்னோட கணவர், மகளிர் சுய உதவிக் குழு ஆரம்பிக்கறதைப் பத்தி ஐடியா குடுத்தாரு!'' என்கிறார் கல்பனா சாவ்லா குழுவின் ஊக்குநராகச் செயல்பட்டு வரும் சரஸ்வதி.

''2003-ல் குழு ஆரம்பிச்சோம். மாதா மாதம் பணம் சேமிக்கத் தொடங்கினோம். முதல் வருஷம் என்ன தொழில் செய்யற



துன்னே தெரியலை. அதிகம் படிக்காத நாங்க, புதுசா என்ன தொழில் செஞ்சுட முடியும்? எங்களுக்குத் தெரிஞ்சதெல்லாம் இந்தச் சமையல் ஒண்ணுதான். அதனால கேன்டீன் ஆரம்பிக்கலாம்னு முடிவு பண்ணி, மாவட்ட ஊரக வளர்ச்சித் துறையிடம் உதவி கேட்டோம். அவங்களும் எங்களுக்கு உதவுனாங்க'' எனக் கூறுகிறார் சுய உதவிக் குழுவின் உறுப்பினர் ராஜாமணி.

''மாவட்ட நிர்வாகம் எங்களுக்கு நடமாடும் உணவக நாற்சக்கர வண்டியை இலவசமாகவே தந்து உதவியது. தகரத்தில் மேற்கூரை, கேஸ் அடுப்புகள் மூன்று, இரண்டு மின் விளக்குகள். இவற்றின் மதிப்பு மட்டும் நாற்பத்தைந்தாயிரம் ரூபாய். 2004ல் கோவை டவுன் ஹால் பகுதியில், மணிக் கூண்டு எதிரே பூமாலை வணிக வளாகத்தில், இடம் ஒதுக்கித் தந்தது மாநகராட்சி!'' எனச் சொல்கிறார் எஸ். வள்ளியம்மாள்.

''கேன்டீன் நடத்துறதுன்னு முடிவானதும், எங்கள்ல எட்டுப் பேர், கிராமங்கள்ல கூலி வேலைக்கே போறோம்னு சொல்லிட்டாங்க. மீதி அஞ்சு பேரு மட்டும், நாலு வருஷமா இதே இடத்துல கேன்டீன் நடத்தி வர்றோம். இப்ப கையில கொஞ்சம் பணங்காசோட இருக்கோம்'' என்று ஆரம்ப காலக்கட்டத்தைப் பகிர்ந்து கொள்கிறார் எம்.கே.சரஸ்.

''எனக்கு ரெண்டு பையன். கணவருக்கு பவர் லூம்ல வேலை. இப்ப நாலு வருஷமாத்தான் எங்க வீட்டுல பணங்காசு புழங்குது. முதல் பையன் ஐ.டி.ஐ. ரெண்டாம் வருஷம் படிக்கறான். ரெண்டாவது பையன் பத்தாம் வகுப்பு. கேன்டீன் வேலைல ஈடுபடவும்தான், அவங்க ரெண்டு பேரையும் எங்களால படிக்க வைக்க முடியுது. இல்லைன்னா எட்டாம் வகுப்போடு நிப்பாட்டிட்டு, கூலி வேலைக்கு




# வளைக்கரங்கள்!

அனுப்ப வேண்டியிருந்திருக்கும்!'' எனச் சொல்கிறார் சுப்புலெட்சுமி.

குறைந்த விலை. சிறந்த தரம். வீட்டுச் சுவை. இவை மூன்றுமே இந்த உணவக மகளிரின் தாரக மந்திரம். அது, அவர்களுக்கு நிறைய வாடிக்கையாளர்களைச் சேர்த்து விட்டிருக்கிறது. ''முதல் மூன்று வருஷங்கள் மதிய சிற்றுண்டி உணவும், மாலை நேர டிபனும் தயாரித்து விநியோகித்து வந்தோம். எங்கள் ஐந்து பெண்களில் தலா ஒவ்வொருவருக்கும், தினசரி இருநூறு ரூபாயிலிருந்து இருநூற்றைம்பது ரூபாய் வரைக்கும் லாபம் கிடைத்து வந்தது. இப்ப ஒரு வருஷமாக மதிய உணவு சிற்றுண்டி மட்டும் விநியோகித்து வர்றோம். இதில் ஒவ்வொருத்தருக்கும் எல்லா செலவுகளும் போக தலா நூற்றைம்பதிலிருந்து நூற்றியெழுபது ரூபாய் வரைக்கும் கிடைக்குது. கேன்டீன் வேலை முடிந்து கிளம்பும்போது, தினசரி எங்கள் லாபத்தொகையை அவரவருக்குப் பிரித்துக் கொடுத்துவிடுகிறோம். அன்னன்னைக்கு உழைச்ச காசை அன்னைக்கே கையில பார்த்திடுறோம்; அதுல ரொம்ப திருப்தி. இந்த மூணு - நாலு வருஷத்துல எல்லாருமே கொஞ்சம் பணம் காசு சேமிச்சு வைச்சுருக்கோம்; புள்ளைங்கள நல்லா படிக்க வைக்கறோம். ரெண்டு மாசத்துக்கு முன்னாடி, எங்க மகளிர் சுய உதவிக்குழுவுக்குப் பொருளாதார மேம்பாட்டுக் கடனா, ரூபாய் மூணரை லட்சம் கிடைச்சது. அதை, எங்கள் குழுவினர் பதிமூணு பேரும் சமமாகப் பிரித்துக்கொண்டோம். அடுத்த மாதத்திலிருந்து அந்தக் கடனை திருப்பிச் செலுத்த இருக்கிறோம்!'' சொல்கிற சரஸ்வதியின் குரலில் உற்சாக வீணை மீட்டல்!

செய்தியும், சித்திரங்களும் :
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# மழையடிது

அடர் மழை நாளில்
தான் புகைக்கும் சுருட்டின்
நுனி நெருப்பென
கோணி போர்த்திய
உடம்பிலிருந்து
முகம் நீட்டிப்
பார்க்கிறான் அவன்

ஒழுகும் குடிசைக்கு
எதிரே உயர்ந்திருக்கும்
அடுக்குமாடி குடியிருப்பில்
ஒதுங்கும் தெருநாயை
விரட்டுகிறார்கள்
வீட்டுக்காரர்களும் காவலாளிகளும்

சாலை கடந்து
ஓடிவரும் ஜீவனை
கோணிக்குள் பொத்தி
கூட்டிச் செல்கிறான்
குடிசைக்குள்

அரைவயிற்றுக் கஞ்சியில்
ஆளுக்கு அரைக்கரண்டியை
தட்டில் ஊற்றி
'சாப்புடுறா மணி'யென
பசியாற்றி மகிழ்கிறது
ஐந்து உயிர்கள் கொண்ட
அவன் குடிசை

கோவி. லெனின்



# Annual Discount Sale by Prashanti

Upto **50%*** Off

From 17th March to 12th April 2008



**PRASHANTI**
House of Silk Cottons

PRASHANTI
16, 6th Cross St. C.I.T. Colony, (Behind Chettiar Hall)
Mylapore, Chennai - 4. Ph. 24991850 / 24997636

PRASHANTI'S PARIPURNA
# 52. 4th Main, 17th Cross, Malleswaram Bangalore - 55.
Ph: 23341632 / 98861 85951

*Conditions apply

No Holiday during Sale

Visit www.bharatmatrimony.com / Wedding Directory / Apparels

---

SRI

# S.S.M. RESIDENCY

**A Township with calm and serene Atmosphere**

**For Senior Citizens and Sickly Disabled**



- For the Elite with clean habits
- To enjoy Twilight of life with peace, honour, dignity and security
- Luxurious living with pure vegetarian balanced diet
- Medical block exclusively for sickly / disabled - all age Groups
- Round the clock Medical Care and Nursing
- Care unto the last with love and affection

## SRIMATHI SUNDARAVALLI MEMORIAL RESIDENCY

(Managed by SSME Trust, Chennai - 600 044)

Moppedu Road, Alapakkam, New Perungalathur, Chennai - 600 063.

**Phone : 044 - 22792003, 22792141**

E-mail : ssmeto@dataone.in

Website : www.ssmhome.org

**கா**சி வருவது சீதாவுக்கும் சுந்தரேசனுக்கும் பல வருடக் கனவு. அது இப்போதுதான் ஈடேறியிருக்கிறது. இருவர் மட்டும் கிளம்பினார்கள். சீதாவின் பெரியப்பாவுக்குப் பல முறை காசி வந்துபோன அனுபவம். அவருக்கு இருக்கும் கான்ட்டாக்ட்டுகளை வைத்து முன் கூட்டியே காசியில் தங்குவதற்கும், பித்ரு காரியங்களை ஒன்றுவிடாமல் செய்வதற்கும் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

கங்கையில் ஸங்கல்பம் செய்து வைத்தார் சாஸ்திரிகள்.

பின் தம்பதி பூஜை செய்யச் சொல்லி ஸ்ராத்தமும் பண்ணி வைத்தார். இந்தச் சடங்குகள் முடிந்தபின், நான்கு பண்டாக்களுக்குப் பலவிதமாகச் சமைக்கப்பட்டிருந்த உணவு வகைகளைப் பரிமாறச் சொன்னார். எல்லோருக்கும் திருப்தியாகப் பரிமாறினாள் சீதா. அப்போது அவர்களில் முதிர்ந்த ஒருவரை, எங்கோ பார்த்தாற் போலிருந்தது அவளுக்கு. சாப்பிட்டு முடித்தவுடன் சாஸ்திரிகள் 'திருப்திதானே?' என்று கேட்க, அவர்களும் 'திருப்தி' என்று சொல்லி எழுந்தார்கள்.

**ம**றுநாள் அலகாபாத்தில் 'அக்ஷய வடம்' என்ற, பிரளய காலத்தில்கூட அழியாத பெரிய ஆல மரத்தைத் தரிசித்தனர். அங்கும் ஸ்ராத்தம் செய்து வைக்கப்பட்டது. அங்கும் பண்டாக்களுக்குப் பரிமாறும் போது அதே முதியவரைப் பார்த்ததும், மனது யாரையோ ஞாபகப்படுத்தியது சீதாவுக்கு. அவர்கள் கலைந்து செல்லும் போது சுந்தரேசனின் காதுகளில், ''இவரை எங்கோ பார்த்த மாதிரி இருக்கு'' என்றாள். ''இந்த மாதிரி இங்கே ஆயிரம் பேர் இருப்பா'' என்றார் சுந்தரேசன்.

சீதாவுக்கு எண்ணமெல்லாம் அவரையே சுற்றி வந்தது. வயது எழுபதுக்குக் குறையாது. வழுக்கை; மெலிந்த தேகம்; நடுத்தர உயரம்; காவியேறிய பற்கள். நாளைக்கு அவரிடமே பெயர், ஊர் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று சீதா நினைத்துக்கொண்டாள்.

**லெஷ்மி மோகன்**

**ம**று நாள் கயா சென்றடைந்தனர். அங்கு பல்குனி நதியில் நீராடிவிட்டு அங்கும் ஸ்ராத்தம் செய்தனர். வழக்கம்போல் பண்டாக்களுக்குப் பரிமாறும்போது அதே முதியவரைப் பார்த்தாள் சீதா. நினைவு பின்னோக்கிச் சென்றது.



**சீ**தாவுக்குத் திருமணமாகி மேல் மங்கலம் என்னும் கிராமத்தில்தான் குடிபுகுந்தாள். நான்கு அக்ரஹாரங்களுடனும், ஒரு சிவன் கோயிலுடனும் கூடிய அழகான சிறிய ஊர் அது. எங்கும் பசுமையான வயல் வெளிகள்; இவர்களுக்குப் பக்கத்து வீட்டில் செக்கச் செவேலென்று அழகான சிவகாமி என்ற காமு, இந்த சுப்ரமணியனை [illegible]



ஒவ்வொரு செயலிலும் குறை கண்டு பிடித்துக் கத்திக்கொண்டே இருப்பார்.

''இன்னைக்கு டிஃபனுக்கு அடை வார்த்துடு'' என்று வெத்தலை பாக்கு மென்றுகொண்டே ஆர்டர் போடுவார். பண்ணிக் கொடுத்தால், ''மொறு மொறுனே இல்லையே... என்ன வார்த்துருக்க?'' என்று தட்டை விசிறி அடிப்பார்.

மறுநாள் பஜ்ஜி போடு என்பார். செய்து கொடுத்தால், ''இதென்ன ஒவ்வொரு பஜ்ஜியிலும் கால் லிட்டர் எண்ணெய் எடுக்கலாம் போல; நீயே தின்னு'' என்று தூக்கி வீசுவார். கணவன் மனைவி என்ற நெருக்கம் துளிகூட இருந்ததே இல்லை.

''அந்தப் பெரியவர் யார்?'' விசாரித்தார் சுந்தரேசன். ''இங்கு வந்து இரண்டு வருடங்கள் ஆச்சு.

# திருப்தித்தானே?

இவருக்கு வேலை என்று ஒன்றும் இல்லை. ஆனால், பூர்வீகச் சொத்தாகப் பொன் விளையும் பூமியும் தென்னந்தோப்புகளும் இருந்தன. இருந்தென்ன லாபம்? 'குன்றித் தின்றால் குன்றும் மாளும்' எனும் பழமொழிக்கேற்ப, பண்ணையாட்களை வேலை வாங்கத் தெரியாமலும், சீட்டாட்டத்திலுமாய்க் காலத்தைக் கழித்தார் சுப்ரமணியன். எப்போது பார்த்தாலும் நண்பர்கள் புடைசூழத் திண்ணையில் சீட்டுக் கச்சேரி நடந்துகொண்டிருக்கும். அவர்களுக்கு காஃபி கலக்கவே காமுவுக்கு நேரம் சரியாக இருக்கும். போதாக் குறைக்கு, வீட்டில் மனைவி செய்யும்

மேல்மங்கலத்தில் என் சிநேகிதர் இருக்கிறார். அவர்தான் கூட்டி வந்தார். நல்ல நிலையில் இருந்தவராம். கெட்ட பழக்கத்தினால் சொத்துக்களையெல்லாம் இழந்துவிட்டாராம். ஒரு வேளை சாப்பாட்டுக்கே கஷ்டப்படும் நிலையில் இருக்கும் இவருக்கு, ஏதாவது வேலை கொடு என்றான். இந்த வயோதிகத்தில் இவரிடம் என்ன வேலை வாங்குவது? அதனால், ஸ்ரார்த்தம் செய்பவர்கள் பரிமாறியதைச் சாப்பிட்டுவிட்டு 'திருப்தி' என்று சொல்வதற்காவது இருந்துவிட்டுப் போகட்டும் என்று வைத்துக்கொண்டுள்ளேன்'' தலைமை சாஸ்திரிகள் விளக்கினார்.

சுந்தரேசனும் சீதாவும் ஒருவரையொருவர் அர்த்தபுஷ்டியுடன் பார்த்துப் புன்னகைத்துக்கொண்டார்கள்.

●

## வட்டமேஜை

**வ**குப்புவாதக் கலவரங்களினால் பாதிக்கப்பட்ட அன்றைய குஜராத்தின் இன்றைய நிலவரத்தைத் தொகுத்தளித்த கல்கியின் 'குஜராத் டுடே', மலர்ச்சி ஸ்பெஷலே!

- சு.ஸ்ரீகாந்த், நெய்வேலி

**வ**ன்முறை காயங்களை, மத நல்லிணக்கத்தால் ஆற்றி, மீதமுள்ள 49% மக்களுக்கும் தலைவராக மோடி மாற பாகுபாடின்றி உழைக்க வேண்டும்!

- ஆர்.பிரகாஷ், பொன்மலை

**அ**ருகம்புல்லில் இவ்வளவு மகத்துவம் இருக்கிறதா! உண்மையிலேயே அருகம்புல் 'ஆல் இன் ஆல்'தான்.

- என்.பாலகிருஷ்ணன், மதுரை

# சோனியாவுக்கு அனுப்புங்கள்!

**க**ல்விக்கோயில் இராஜா எழுதிய 'ஆறாது சினம்' கவிதை வெகு அருமை.

- பா.அச்சுதன், வயலூர்

**எ**ங்கள் வேதாரண்யத்தில் கல்கி சில வேளைகளில் லேட்டாகக் கிடைக்கிறது. இப்படியிருக்க, நாங்க எங்கே ஸ்பீட் போஸ்டுக்கு எழுதி சி.டி. பரிசு வாங்கறது?

- கருப்பம்புலம் சித்திரவேலு, நெய்விளக்கு

**மோ**டியின் மதத் தீவிரவாதத்தைக் கண்டித்து எழுதும் நீங்கள், அவரின் நிர்வாகத்திறமையைப் பாராட்டி எழுதியது பத்திரிகை தர்மம். 'சோனியாவின் ஒப்புதல் வாக்குமூலம்' தலையங்கத்தை மொழிபெயர்த்து அவருக்கே அனுப்பி வைக்கலாம்!

- ரொசாரியோ ரவிச்சந்திரன், சென்னை - 59

**'த**ங்கக் கோயில் தவறேதும் இல்லை!' படித்தபோது, அந்தக் கோயிலைப் பார்க்க வேண்டும் என்ற பேராவலும் ஏற்பட்டது.

- எஸ்.ஆர்.ஹரிஹரன், சென்னை- 109

**எ**ழுத்துச் சிற்பிகள் சுஜாதா மற்றும் நா.பார்த்தசாரதி பற்றிய கல்கி ராஜேந்திரனின் மலரும் நினைவுகள் செம தூள்!

- வி.என்.கதிர்வேல், வேலூர் - 6

**ஒ**கேனக்கல்லுக்கு, சொந்தம் கொண்டாட ஆரம்பித்துள்ள கர்நாடக அரசியல்வாதி பற்றிய பின்னையின் கார்ட்டூன் செம நெத்தியடி!

- ரேவதிப்ரியன், ஈரோடு

## ஸ்பீட் போஸ்ட்

**கு**ஜராத் கலவரத்தைப் பொருத்தவரை நீதி கிடைக்க வேண்டும் என்பதுதான் ஒட்டுமொத்த முஸ்லிம்களின் விருப்பமும்.

- உம்மெ ஹாலா, வாணியம்பாடி

**கி**ருஷ்ணர் மீது ஆழ்ந்த பக்தி கொண்ட குஜராத் மக்கள், அஹிம்சையின் மீது நம்பிக்கை கொள்ளத் தவறியது அரசியல்வாதிகளால்தான்.

- அ.ரா.வலம்புரிநாகராஜன், ஈரோடு

# தொடரட்டும் நமது இலட்சியப் பயணம்...







அன்புள்ள வாசகர்களே!

இப்படி ஆரம்பித்தாலே விலை உயர்வு அறிவிப்பாகத்தான் இருக்கும் என்று 'கெஸ்' பண்ணுவது கஷ்டமில்லை. கூட்டவே, கல்கியின் பக்கங்களும் நீங்கள் விரும்பியபடியே அதிகமாகின்றன என்பது குட் நியூஸ்தானே! **அடுத்த இதழ் (13.4.08) முதல் உங்கள் கல்கியின் விலை ரூ.10; பக்கங்கள் இனி 96.** ஒவ்வொரு பக்கமும் பக்காவாக இருக்கும் என்பது ஆசிரியர் குழு உங்களுக்கு அளிக்கும் உத்தரவாதம். யூத்ஃபுல் கெட் அப்பும், கலர்ஃபுல் சிந்தனைகளும், ஆரோக்கியமான சிரிப்பலைகளும் பக்கத்துக்குப் பக்கம் புரண்டு வரும். அதற்காக தேசியத்தையும் இலக்கியத்தையும் ஆன்மிகத்தையும் ஆணித்தரமான அரசியல் விமர்சனத்தையும் கை விட்டுவிடுவோம் என்று பயந்துவிடப் போகிறீர்கள்! அவை இம்மியும் குறையாமல் பவனி வரும். பக்கங்களைப் பார்த்து உங்கள் பரவசம் பெருகும்.

நீங்களும் எங்களுக்கொரு உத்தரவாதம் தர வேண்டுமே..! வேறென்ன, எங்களுடன் சேர்ந்து கல்கியை அடுத்த தலைமுறைக்கும் எடுத்துச் செல்ல உதவும் வகையில் 'எப்போதும் கல்கியை வாங்கிப் படிப்போம்' என்கிற உத்தரவாதம் தரவேண்டும்! கல்கி ஒரு சாதாரி வார இதழ் இல்லை... அது ஒரு இலட்சியப் பயணம். எங்களுடன் நீங்களும் வருவீர்களானால் சளைக்காமல் தொடரலாம்; விரைவில் சிறகடித்தும் பறக்கலாம்!

**- சீதா ரவி**
(ஆசிரியர்,
நிர்வாக இயக்குநர் கல்கி நிறுவனம்)



Palam
Sri Palam Silk Sarees

## கல்கி - பாலம் சில்க்ஸ் வழங்கும்
## ஆறுவார - பட்டுப் புடவை பரிசு அறிவிப்பு

**க**ல்கி - பாலம் சில்க்ஸ் இணைந்து நடத்திய ஆறு வார அதிரடி - பட்டுப் புடவை பரிசுத் திட்டத்துக்கு ஏராளமான கடிதங்கள் வந்து குவிந்தன. அதிகமான கடிதங்கள் சரியான விடையோடு வந்திருக்கின்றன. எனவே, குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு, பட்டுப்புடவை பரிசு பெறும் அதிர்ஷ்டசாலிகள் இதோ...

**ஆறுவார அதிரடி - பட்டுப்புடவை பரிசுத் திட்டம் - 1**
எம்.ஜெ. மீனாகுமாரி, கீழ்ப்பாக்கம், சென்னை - 10.

**ஆறுவார அதிரடி - பட்டுப்புடவை பரிசுத் திட்டம் - 2**
ஆர். ராதா, ஸ்ரீரங்கம், திருச்சி - 06.

தேர்ந்தெடுக்கப்பட்ட அதிர்ஷ்டசாலிகளுக்கு வாழ்த்துகள். மேற்கண்ட இருவருக்கும் பட்டுப் புடவை பரிசாக அனுப்பப்படும்.

# ‘மதுமிதா மொழிகள்’



‘குடைக்குள் மழை’ படத்தில் நடித்தவரின் காட்டில் தூறல்கள் மட்டுமே விழுந்துகொண்டிருந்ததால், கொஞ்ச காலம் தமிழ்சினிமாவை விட்டு ஒதுங்கியிருந்தார் மதுமிதா. இப்போது பெருமழைக்கான ஏற்பாடுகளோடு மீண்டும் கோடம்பாக்கம் வந்திருக்கிறார். அவரோடு பேசிய போது மொழிந்தவை...

**இருக்கிறதை விட்டுட்டு பறக்கறதைப் பிடிக்க...**

“தமிழ்ல மட்டுமில்லாம மற்ற மொழிகளிலேயும் நடிக்கப் பறந்ததுதான் என் தவறு. கன்னடப் படத்துல நடிக்கப் போனேன். அதனால் தமிழ்ல ஓர் இடைவெளி! ‘குடைக்குள் மழை’ வந்தபோது எல்லோரும் என்கிட்ட எவ்ளோ அன்பா இருந்தாங்க. அந்த அன்பும் கரிசனமும் எனக்கு எங்கேயும் கிடைக்கலை. அதனால மறுபடியும் தமிழ் ரசிகர்களைத் தேடி வந்துட்டேன்.”

**ஆடிப் பட்டம் தேடி விதை...**

“... அப்படின்னு சொல்வாங்க. அதை ‘ஃபாலோ’ பண்ணி கதைக்கும், கேரக்டருக்கும் முக்கியத்துவம் கொடுத்து நடிக்க ஆரம்பிச்சிருக்கேன். அதனால ‘யோகி’ படத்துக்குக் கூப்பிட்ட போது, அமீர் ஹீரோங்கறது பொருட்டாகத் தெரியலை. படத்தோட கதையும் என்னோட கதாபாத்திரமும்தான் பிரதானமா தெரிஞ்சது. சிறந்த படத்துல நானும் ஓர் அங்கம்ங்கிற சந்தோஷத்துல ஒப்புக்கிட்டேன். ஷங்கர் கம்பெனியில் ‘அறை எண் 305ல் கடவுள்’ படத்திலும் நடிக்கிறேன். நடிக்கச் சந்தர்ப்பம் ஏற்படுத்திக்கொடுக்கற படங்கள் எதுவாக இருந்தாலும் நான் ரெடி.”

**முயற்சி திருவினை யாக்கும்...**

“அப்படின்னா பெரிய ஹீரோக்

களோடு நடிக்கும் எண்ணமே இல்லையான்னு கேட்காதீங்க. அதற்கான முயற்சிகளைச் செய்துட்டே இருப்பேன். எனக்கு ரொம்பப் பிடிச்ச நடிகர் கமல்ஹாசன். என் சினிமா வாழ்க்கையில் கண்டிப்பா ஒரு படமாவது அவர்கூட பண்ணணும். நல்ல கதாபாத்திரங்களா அமையாததால சில பெரிய ஹீரோக்களின் பட வாய்ப்புகளைத் தவிர்த்திருக்கேன். தொடர்ந்து முயற்சி செய்துட்டே இருப்பேன். பெரிய ஹீரோக்களோடு டூயட் பாடறதை பார்க்கத்தான் போறீங்க!''

- செந்தில்



# பஸ்ஸில் வந்த

**மா**ர்ச் 21ஆம் தேதி அன்று சோட்டா ஹோலி, பங்குனி உத்தரம், புனித வெள்ளி, மிலாடிநபி என இந்திய மக்கள் பல்வேறு கொண்டாட்டத்தில் திளைத்திருக்க, தலைநகரவாசிகளுக்கு மட்டும் கூடுதல் கொண்டாட்டம்! திருப்பதியிலிருந்து தன் குடும்பத்தாருடன் கிளம்பி வந்தார் ஒரு வி.வி.வி.ஐ.பி. ஆம், சாக்ஷாத் ஸ்ரீநிவாசபெருமான்தான்,





ஸ்ரீ தேவி, பூதேவியுடன் வந்து பங்குனி உத்தரம் அன்று தில்லியில் தமது திருமண உற்சவத்தை நடத்திக்கொண்டு மக்களை உற்சாகத்தில் திளைக்கச் செய்தார்.

கல்யாணத்தை நடத்தி வைக்க, திருமலை - திருப்பதியிலிருந்து 41 பேர் அடங்கிய குழுவும் பெருமாளுடன் வந்தது. அவர்களுள் வேத விற்பன்னர்களான கே.எஸ்.கௌரிசங்கரும் எம்.சங்கரும் கூறியவை:

★ காஞ்சி சங்கர மடத்தினரால் வழங்கப்பட்ட ஐம்பது லட்ச ரூபாய் பெறுமானமுள்ள 'ஸ்ரீ வார் கல்யாண ரதம்' என்று பெயரிடப்பட்ட அந்த அற்புதமான பேருந்தில்தான் உற்சவ ஸ்ரீநிவாச பெருமாள் திருமலையிலிருந்து இந்தியாவின் பல இடங்களுக்கு, கல்யாண உற்சவத்துக்காகப் பயணிக்கிறார். இந்த 'கல்யாணரதம்' (பேருந்து) திருமலையிலிருந்து தில்லிக்கு வர மூன்று நாட்கள் ஆனது.

★ இதுவரை இந்தியாவில் மும்பை, ஸ்ரீரங்கம், ஹைதராபாத் உட்பட 20 இடங்களில் இந்த 'கல்யாண உற்சவம்' பிரமாண்டமாக திருமலை திருப்பதி தேவஸ்தானத்தினரால் நடத்தப்பட்டுள்ளது.

★ தில்லியில், பெருமானுக்கும் தாயாருக்கும் நடந்தேறிய அந்த அதி அற்புதமான திருமண வைபவத்தை இருபதாயிரத்துக்கும் மேற்பட்ட மக்கள் கண்டு, பக்திப் பரவசம் அடைந்தார்கள்.

★ சந்திரன் தனது அக்காவான மஹாலட்சுமியின் திருமண வைபவத்தைக் கண்குளிரக் கண்டு

ரசிக்க, திருமண மேடைக்குச் சரியாக நேரெதிரே முழுமுக பிரகாசத்துடன் வந்து நின்றதை அனைவருமே பக்திப் பரவசத்துடனும், உள்ளம் கனிந்த சிலிர்ப்புடனும் பார்த்தார்கள்.

★ திருப்பதியிலேயே இருக்கும்

## பெருமாள்!

உற்சவ மலை மூர்த்தி பெருமாள், சுமார் 150 வருடங்களுக்கு முன் வெங்கம்மா என்ற பக்தையின் கனவில் தோன்றி, 'நான் இந்த இடத்தில் உற்சவ மூர்த்தி ரூபத்தில் இருக்கிறேன்' என, அருளியபடி கண்டெடுக்கப்பட்டவர். இந்த உற்சவ பெருமாள் திருமலையை விட்டு ஒரு பொழுதும் இறங்க மாட்டார். கல்யாண உற்சவங்களுக்காகக்



## திருமலை டு தலைநகர்!

கொண்டுவரப்படும் உற்சவர், திருப்பதி தேவஸ்தான அர்ச்சகர் இல்லத்தில் வீற்றிருப்பவர் ஆவார்.

– நளினி சம்பத்குமார்

# 'முத்தலாக்' மோசடி!









''இஸ்லாமியர்களைக் கட்டுப்படுத்தும் ஷரியத் சட்ட விதிகளின்படி, பெண்களுக்குத் தங்கள் கணவரைப் பிரிவதற்கு முழு உரிமை உண்டு. ஷரியத் சட்டத்தில் இதற்கான விதிமுறைகள் இடம் பெற்றிருந்தாலும், ஆணாதிக்கச் சமுதாயத்தில் இதுவரை இந்த விதிமுறை அமல்படுத்தப்படவில்லை'' என்று சொல்லியிருக்கிறது அகில இந்திய முஸ்லிம் பெண்கள் தனிநபர் சட்ட வாரியம். இஸ்லாமியப் பெண்களின் நலன்களைப் பாதுகாக்க, புதிய விதிமுறைகளையும் வெளியிட்டுள்ளது. இந்தத் தடாலடி செயல்பாடு, இஸ்லாமிய அமைப்புகளிடையே புதிய விவாதங்களுக்கும் உரத்த சிந்தனைக்கும் வழி வகுத்து, அந்தச் சமுதாயத்தில் ஒரு பரபரப்பை ஏற்படுத்தி இருக்கிறது. விவாகரத்தும் பெண் உரிமையும் 'சமூகப் பிரச்னை'யாகக் கருதப்படும் காலகட்டத்தில், இஸ்லாமுக்கு வெளியேயுள்ள மக்களையும், இந்த நடவடிக்கை ஆர்வம்கொள்ளச் செய்திருக்கிறது.

''குடும்ப வாழ்க்கை நடத்த இயலாத கணவனை, மனைவி பிரிய இஸ்லாத்தில் இடமுண்டு. மகர் என்று சொல்லப்படும் பரிசுத் தொகையை மனைவி திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். விவாகம் ரத்தானாலும், குழந்தைகள் இருக்கும் பட்சத்தில் அவர்களின் வளர்ப்புக்காக நிதியுதவி செய்வதும் தந்தையின் கடமையாகும். ஆனால், பெண் மறுமணம் செய்துகொண்டால் இந்த உதவி நிறுத்தப்படும். சிலர் சட்டதிட்டங்களை லாகவமாகத் திசைதிருப்பிச் சொல்வது மிகவும் கண்டனத்துக்குரியது. குரான் மற்றும் மார்க்க விளக்க நூலாக இருக்கும் ஹதீஸின் அடிப்படையில்தான் ஷரியத் சட்டம் அமைந்திருக்கிறது. இதைக் கடைபிடிக்க வேண்டியது ஒவ்வொரு இஸ்லாமியரது கடமையாகும். எனவே இதுபோன்ற பொது விவாதங்களுக்கு ஒரு சமுதாயத்தை உட்படுத்த வேண்டாம்'' என்கிறார் காங்கிரஸ் பாராளுமன்ற உறுப்பினர் ஜே.எம்.ஆரூண்.

மிகவும் முற்போக்கான இஸ்லாம் மதம், திருமணத்தை ஓர் ஒப்பந்தம் என்ற முறையிலேயே அணுகுகிறது. குடும்பம் ஒரு நிறுவனம். கணவர், அதன் தலைவர் - நிர்வாகி. அங்கே ஆண்டான் - அடிமை நிலை கிடையாது. குடும்பம் என்ற நிறுவனத்தை நடத்திச் செல்வதற்கு இருவருக்கும் சம உரிமைகளும், கடமைகளும் உண்டு. ஒரு நிறுவனம் எப்படி நல்ல தலைமையின் கீழ் ஆரோக்கியமாக இயங்குகிறதோ, அது போன்று குடும்பத் தலைவனும் செயல்படவேண்டும். நல்ல தலைவர்கள் இல்லாத சமூகம் தன்னைத்தானே அழித்துக்கொள்ளும். ஆனால், காலப்போக்கில் மதத்தின் சட்டதிட்டங்களை, தங்கள் சுயநலத்துக்காக வளைத்துக் கொள்ளும் ஆணாதிக்கப்போக்கு, பெண்களின் குரலை அடக்குகிறது; உரிமைகள் மறுக்கப்படுகின்றன'' என்று ஆவேசப்படுகிறார் பேராசிரியை பர்வீன் சுல்தானா.

முஸ்லிம் முன்னேற்றக் கழகத் தலைவர் ஜவாஹிருல்லா இதை ஆமோதிக்கிறார்:

''முஸ்லிம் பெண்களை மிகவும் பயமுறுத்தும், நோகடிக்கும்

# பெண்கள் 'குலா' செய்யலாம்?

ஒரு சொல்தான் தலாக். இந்த ஒரு வார்த்தையை, மூன்று முறை தொடர்ச்சியாக ஒரு மனைவியைப் பார்த்து கணவன் சொல்லும் பட்சத்தில், அப்போதே அந்த நிலையிலேயே மணமுறிவு ஏற்படுவதாக இஸ்லாம் சட்டம் சொல்கிறது. இதை 'முத்தலாக்' என்றோர்கள். இப்போது இந்த 'முத்தலாக்' பல முஸ்லிம் பெண்களின் வாழ்க்கையில் புயலைக் கிளப்பியிருக்கிறது. வெளி நாட்டிலிருந்து, எஸ்.எம்.எஸ்., ஈமெயில் மூலம், சில அற்ப காரணங்களுக்காக 'முத்தலாக்' சொல்லும் முஸ்லிம்களின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டிருக்கிறது. கணவன் - மனைவிக்குள் ஏதாவது பிணக்குகள், பிரச்னைகள் இருக்குமானால், முதலில் அவற்றைத் தீர்க்க முயற்சி எடுக்க வேண்டும். கணவனுக்கு 'தலாக்' சொல்லும் உரிமை இருப்பது போல, மனைவிக்கும் விவாகரத்து செய்யும் உரிமை உண்டு. இதற்கு 'குலா' என்று பெயர். ஆனால், நமது நாட்டில் பெண்களுக்கு இந்த உரிமையை மறுக்கும் பழக்கம், சில பிரிவு முஸ்லிம் களிடையே இருக்கிறது'' என்கிறார்.

'தலாக்' என்ற சொல் அறியப்பட்டுள்ள அளவுக்கு, 'குலா' என்ற சொல்லோ வழிமுறையோ இஸ்லாமிய சமுதாயத்துக்கு வெளியே அறியப்படவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது!

''திருமணம், சொத்து போன்ற விவகாரங்களில் குரான் அடிப்படையில் வழிகாட்டுதல்கள் சொல்ல, முஸ்லிம் தனிநபர் சட்ட வாரியம் என்ற அமைப்பு இருக்கிறது. இது பல அறிஞர்களை உள்ளடக்கிய அமைப்பு. இதில் கணிசமான அளவில் பெண்களும் உறுப்பினர்கள். ஆனால், இந்த அமைப்புக்கு அரசு அங்கீகாரம் கிடையாது! சென்ற வருடம் இந்த அமைப்பின் வருடாந்திர கூட்டத்தில் 'விவாகரத்து பெறுவதற்கு மனைவிக்கும் உள்ள உரிமையை எடுத்துச் சொல்லி, அதை மனைவி கோரும்போது, அங்கீகரிக்க வேண்டும்' என்று தீர்மானமே போட்டிருக்கிறார்கள்.

''குடும்பப் பிரச்னைகள் ஜமாத் பரிசீலனைக்கு வரும்போது, ஆணாதிக்கம் கொண்ட ஜமாத், பெண்களின் பிரச்னைகளை, கனிவோடு கேட்பதில்லை என்ற குற்றச்சாட்டு வைக்கப்படுகிறது. எடுத்தேன் கவிழ்த்தேன் என்ற ரீதியில் ஜமாத் எதுவும் செய்துவிட முடியாது. பெண்கள் தனிநபர் சட்டவாரியமும் ஒருசிறிய குழுதான். சமுதாயத்திலோ, அல்லது



வழக்கறிஞரும் அ.இ.அ.தி.மு.க. சட்டமன்ற உறுப்பினருமான பதர் சயீத்:

''இப்போது காஜி மூலமாகவோ அல்லது ஜமாத் மூலமாகவோ மணமுறிவு வாங்கினாலும், விசா மற்றும் பாஸ்போர்ட் விண்ணப்பிக்கும்போது, நீதிமன்ற உத்தரவைக் கேட்கிறார்கள். மறுபடியும் ஒரு நடைமுறையைக் கையாள வேண்டியிருக்கிறது. எனவே, ஷரியத் விதிமுறைகளை codify செய்து சட்டமாக்கி, நீதிமன்ற பரிசீலனைக்கு விட்டுவிடலாம். விவாகரத்து, ஜீவனாம்சம் போன்று, பெண்களைப் பாதிக்கும் பல விஷயங்களில் நீதிமன்றம் சென்று நிவாரணம் பெறலாம். தலாக்கும் வேண்டாம்; குலாவும் வேண்டாமே. இந்த மாற்றத்தை ஏற்கத் தயங்கினால் இஸ்லாமியப் பெண்கள் எழுச்சியைத் தவிர்க்க முடியாது'' என்கிறார்.


● பதர் சயீத்

அரசு மட்டத்திலோ அதற்கு அங்கீகாரம் கிடையாது'' என்கிறார் ஜவாஹிருல்லா!

'அரசு அங்கீகாரமற்ற குழுக்களின் பிடியில் முஸ்லிம் பெண்களின் சுதந்திரம் முடங்கிக் கிடக்கிறதா..?' என்று கேட்டால், ''ஆமாம்!'' என்று உறுதியாகச் சொல்கிறார் ஷரிபா. 'தமிழ்நாடு முஸ்லிம் பெண்கள் ஜமாத்' என்ற அமைப்பை நடத்தும் புதுக்கோட்டையைச் சேர்ந்த ஷரிபா, ''முஸ்லிம் ஆண்கள், குரான்படியும் நடப்பதில்லை; மனசாட்சிப்படியும் நடப்பதில்லை'' என்கிறார். ஷரிபாவின் அமைப்பு இஸ்லாமியர் மத்தியில் ஒரு அதிர்வலையை ஏற்படுத்தியிருக்கிறது என்கிறார்கள். ''நீதி கேட்டு ஒரு பெண் ஆண்களிடமல்லவா செல்ல வேண்டியிருக்கிறது. காஜிகள், மவுல்விகள், உல்மாக்கள் என்று ஒரே ஆணாதிக்கம்தான். கணவனை விட்டுப் பிரிய விரும்பும் பெண்கள், எல்லா விவரங்களையும் ஜமாத்திடம் சொல்ல முடியாது. இஸ்லாத் சட்டதிட்டப்படி, 'குலா' சொல்ல முனையும் பெண்கள், காரணத்தைச் சொல்லவேண்டிய அவசியம் கூட இல்லை. ஆனால், நடைமுறையில் இந்த உரிமை மதிக்கப்படுவதில்லை; பெண்கள்தான் மிதிக்கப்படுகிறார்கள்'' என்கிறார்!

''முஸ்லிம் பெண்கள் தனிநபர் சட்ட வாரியம் புதிய வழிகாட்டுதல்களை உரத்த சிந்தனைக்காக விட்டிருந்தாலும், முஸ்லிம் தனிநபர் சட்ட வாரியம் அவற்றை ஏற்கவில்லை. இதனால், உரிமைப் போராட்டம் சூடுபிடிக்கத் துவங்கியுள்ளது'' என்பதைச் சுட்டிக்காட்டுகிறார் பர்வீன் சுல்தானா. ''குலாக்கின் முழுப் பொருளைச் சரியானபடி விளக்கி, விழிப்புணர்வு ஊட்ட வேண்டும். ஏனென்றால், கோபத்திலும் உணர்ச்சிவசப்பட்டும் தலாக் சொல்லும் ஆண்கள் இருக்கிறார்கள். இறைவன் மிக, மிக வெறுக்கும் வார்த்தைதான் தலாக். 'முத்தலாக்' என்பது மகா மோசடி. தலாக் சொல்லும் ஆண்கள் மாதத்துக்கு ஒருமுறை இடைவெளிவிட்டு, தலாக் சொல்லி, மூன்று மாதங்கள் சேர்ந்து வாழ வேண்டும். அப்புறம்தான் காஜி அல்லது ஜமாத் மூலமாக முறைப்படி ரத்து பெற வேண்டும். அதேசமயம் 'குலா' சொல்லும் பெண்கள், திருமணம் நடத்தி வைத்த ஜமாத் அல்லது காஜி மூலம்தான் பிரிந்து போவதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டும். மாறாக, இப்போது ஆண்கள் தலாக்கைத் தவறாகப் பிரயோகிப்பதுபோல் பெண்களும் 'குலா'வைத் தவறாகப் பிரயோகிக்க ஆரம்பித்தால், மேலும் பிரச்னைகள்தான் எழும். மதம் என்பது நல்வழி காட்டல்தான். காலத்துக்கேற்ப மாற்றங்களை அனுமதிப்பதும் ஏற்பதும் மதத்தின் ஆதார கோட்பாடுகளை மீறாமல் நிகழ்த்தப்பட முடியும். இதை ஏற்கும் பக்குவம் இல்லாவிட்டாலோ, மதக்கோட்பாடுகளை ஆதிக்கப் பார்வையில் தவறாகப் பயன்படுத்தினாலோ அந்தச் சமூகம் அவதிப்படுகிறது. தவிரவும், மாற்று சமுதாயத்தினால் விமர்சனத்துக்குள்ளாகிறது'' என்று வருத்தப்படுகிறார் பர்வீன் சுல்தானா.

- ப்ரியன்

# திபெத்தின் சுதந்திர வேட்கை வெற்றி பெறுமா?

● சித்ரா கிருஷ்ணமூர்த்தி,
கும்பகோணம்.

? தமிழகத்தில் தி.மு.க.வைப் போல் மத்தியில் ஒரு சிறு பான்மை அரசை காங்கிரஸால் நடத்த முடியுமா?

! இயன்றாலும் செய்யக் கூடாத காரியம் ஐயா! 'மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு' என்று முழங்குபவர்கள் தான் சிறுபான்மை அரசு அமைக்கும் சிறுமையைச் செய்வார்கள்!

● இரா. சக்கரபாணி, மதுரை - 7. ▢

? தமிழக உபரி நிதிநிலை அறிக்கை, அற்புதமான வளர்ச்சித் திட்டங்களுடன் மதுவால் கிடைத்த வருமானத்தில் தயார் செய்யப்பட்டுள்ளதை எண்ணி சந்தோஷப் படுவதா? சங்கடப்படுவதா?



• ஒளிவிடும் எதிர்காலம்!

! சங்கடப்பட வேண்டும். எந்த எதிர்க்கட்சியும் சுட்டிக்காட்டாததை சக்கரபாணி எடுத்துக்காட்டியதற்கு சந்தோஷப்பட வேண்டும்.

● அ. அப்துல்காதர்,
சென்னை - 45.

? 'நான் பால் விலையை உயர்த்தவில்லை. பாலைக் கறந்து என் மூலமாக மக்களுக்குக் கொடுக்கிறானே, அவன் தான் பால் விலையை உயர்த்துகிறான்' என்று முதல்வர் விளக்கம் கூறுவது சரியா?

! பால் விலை மட்டுமா? எல்லா அத்தியாவசிய பண்டங்களின் கிடுகிடு விலை உயர்வுக்கும் இப்படி நொண்டிச் சமாதானம் கூறலாம். பால்காரன்தான் காரணம் என்று தட்டிக் கழிக்கும் கருணாநிதி பதவிக்கு வந்ததற்குக் காரணம், வாக்காளர்கள் அல்லவே அல்ல! அவர்கள் அவரது கட்சிக்கு மெஜாரிட்டி அளிக்கவேயில்லை!

● என்.வி. ரமணி, சென்னை - 92.

? திபெத்தின் சுதந்திர வேட்கை வெற்றி பெறுமா? இதுபற்றி



• தட்டிக் கழிப்பு!


• கோப கமெண்ட்!


• அபராத விதிப்பு!

உலக நாடுகள் அக்கறை காட்டாதது ஏன்?

! சீன மக்களின் சுதந்திர உணர்வையே மதிக்காமல், கட்டு வீழ்த்தி 'சாதனை' புரிந்த சீன கம்யூனிஸ்ட் தலைமையா திபெத்தின் சுதந்திர வேட்கையை அங்கீகரிக்கப் போகிறது? இந்த வேட்கை வெற்றி பெறுவது அரிது எனினும் அதற்குத் தோல்வி என்பதே இல்லை. உலக நாடுகளின் அனுதாபம் நிச்சயம் திபெத்துக்கு உண்டு. ஆனால், நேரடி நடவடிக்கை உலக யுத்தத்துக்குக்கூட அடிகோலலாம். அதனால் தான் தயக்கம். ஒலிம்பிக்கில் பங்கேற்காமல் புறக்கணிக்க ஓரிரு நாடுகள் முடிவெடுத்தாலும் அவற்றின் துணிவையும் நேர்மையையும் பல்வேறு அரசுகள் போற்ற யோசிக்கும்; தயங்கும். ஆனால், இந்நாடுகளை மனிதகுலம் வாழ்த்தும்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை.

? போதுமான டாக்டர்கள், நர்சுகள் இல்லாததால் தேசிய கிராமப்புற சுகாதார திட்டத்துக்கு ஆபத்து ஏற்பட்டுள்ளதாமே?

! கிராமப்புற சுகாதாரத்துக்கு அடிப்படை, அனைவருக்கும் சுகாதாரம் பற்றிய கல்வியைப் புகட்டுவதாகும்; டாக்டர்களும் நர்சுகளும் அல்ல. தகவல் தொடர்பும், சாலைகள் மேம்பாடும், வாகனப் போக்குவரத்தும் மிகுந்துள்ள இந்நாளில் கிராம மக்களுக்கு மருத்துவ வசதி செய்து தருவதும் இயலாத காரியமில்லை. வாலைப் பிடிக்காமல் தும்பைப் பிடித்தால் எந்தத் திட்டத்துக்கும் ஆபத்து ஏற்படாது.

● லெ.நா. சிவகுமார், சென்னை - 33.

? அலுவலகங்கள், நிறுவனங்களில் பணிபுரிவோர், அந்தக் கட்டடங்களில் புகை பிடித்தால் ரூ. 5000 முதல் ரூ. 15,000 வரை அபராதம் விதிக்கத் திட்டமிடுகிறாரே அன்புமணி?

! சட்டம் என்பது சமன் செய்து சீர்தூக்கும் கோலாக இருக்க வேண்டும்; சகட்டு மேனிக்குப் பிறப்பிக்கப்படும் உத்தரவுகளாக இருக்கக்கூடாது. நாடாளுமன்றமே சரியாக இயங்காதபோது, புது சட்டங்களை எடைபோடும் செலக்ட் கமிட்டி எங்கே செயல்படப் போகிறது?

● வே. நா. கதிர்வேல், வேலூர் - 6.

? ரேஷன் கடைகளில் எலக்ட்ரானிக் தராசு வந்து விட்டதே - இனி ரேஷனில் வழங்கப்படும் பொருள்கள் எடை குறையாமல் இருக்கும் என்று நம்பலாம் அல்லவா?

! ஊஹூம்! எலக்ட்ரானிக் துல்லியமாக எடை குறையும் என்று தீர்மானமாக நம்பலாம்.

● ரேவதிப்ரியன், ஈரோடு.

? மழை சேதத்தைத் தொடர்ந்து ரூ. நூறு கோடி நிவாரணம் அறிவிக்கப்பட்டுள்ளதே?

! நிதி ஒதுக்கியதாக அறிவிப்பது எளிது. ஆனால், உரியவருக்கு உரிய நேரத்தில், அவரின் நியாயத் தேவைக்கேற்ப பகிர்ந்தளிப்பது ரொம்ப கடினம். 'இடைத்தரகர்களே' அதிகம் பயனடைகிறார்கள். இதைத் தோழமைக் கட்சி (கம்யூனிஸ்ட்) தலைவரே எடுத்துக் கூறியிருக்கிறார். இந்த இடைத்தரகர்கள் யார் என்று அனுமானிப்பது சிரமமல்ல.

● ப. இராம் முருகன், சென்னை - 68.

? 'சதை தொங்கிய பிறகுதான்

நடிகர்களுக்குச் சமுதாய சிந்தனை வருகிறது' என்கிறாரே தமிழருவி மணியன்?

! அப்போதாவது வருகிறதே என்று சந்தோஷப்பட்டுவிட்டுப் போங்களேன், ஐயா!

● டி. ஜெய்சிங், கோயமுத்தூர்.

? ''தி.மு.க. ஆட்சியில் தமிழகம் இருண்டு போனதாகக் கூறிய ஜெயலலிதா, அதற்காக ஜோதியை எங்களிடம் அனுப்பியுள்ளார்'' என்ற முதல்வரின் கமெண்ட் பற்றி...?

! தமிழகம் இருண்டு கிடப்பதாக முதல்வர் ஒப்புக் கொண்டதாகிறது; ஆனால், இந்த ஜோதியின் தி.மு.க. நுழைவால் தமிழகம் விடியலைக் காணாது. ஒருவேளை ஜோதியின் எதிர்காலம் ஜோதி மயமாகலாம்!



● தொலைத்தது பண்பு!



● வணங்க வைக்கும் தியாகம்!

❑ ரூ. 100/ பரிசு பெறுபவர் :

இரா. சக்கரபாணி, மதுரை - 7.

★ ரூ. 50/ பரிசு பெறுபவர் :

செல்வ மேகலா, பூம்புகார்.

● இரா. கல்யாணசுந்தரம்,
அனுப்பானடி.

? திபெத் விஷயத்தில் அமெரிக்கா கருத்துச் சொன்னால் இந்தியாவிலுள்ள கம்யூனிஸ்டுகள் எதிர்ப் பாய்வது ஏன்...?

! ஏனென்றால், அவர்களுக்கு திபெத்தை ஒடுக்கினாலும் சீனாவைப் பிடிக்கும் - அந்நாடு மாவோ தத்துவத்தை வரித்துக் கொண்டிருப்பதால். ஆனால், ஈராக், ஆப்கானிஸ்தான் முதலான நாடுகளை ஒடுக்கும் அமெரிக்காவைப் பிடிக்காது - அங்கு கம்யூனிஸம் விலைபோகாததால்!

● செல்வ மேகலா, பூம்புகார். ★

? பெரும்பாலான கிராம ஊராட்சிகளில் மாதாந்திர கூட்டம் நடப்பதே இல்லை. உள்ளாட்சி எப்படி நல்லாட்சி ஆகும்?

! எப்போ கட்சி அரசியல் நுழைந்ததோ அப்பவே உள்ளாட்சி அமைப்பு தள்ளாட்ட அமைப்பாகிப் போச்சு. இந்த இலட்சணத்தில் மாதக் கூட்டமாவது நல்லாட்சியாவது!

● கருப்பம்புலம் சித்திரவேலு, நெய்விளக்கு.

? 'எனது கணவரின் விடுதலைக்காக தீவிரவாதிகளை விடுவிக்காதீர்கள்' என்று மத்திய அரசுக்கு சரப்ஜித் சிங்கின் மனைவி வேண்டுகோள் விடுத்துள்ளாரே?

! சிலிர்க்க வைக்கும் தேசாபிமானம், வணங்க வைக்கும் தியாகம், வியக்க வைக்கும் தீரம்!

● எஸ். ராமசாமி,
வடக்கு தயிர்பாளையம்.

? இந்தியா ஆஸ்திரேலியாவை வென்றதற்காக தோனி ஆடு பலி கொடுத்துள்ளாரே?

! கூடவே கிரிக்கெட் பண்பையும் பலிகொடுத்து விட்டார்!

●

# தயாளு அம்மாள் கையில் தமிழக பட்ஜெட்!



● கே.எஸ்.ராதாகிருஷ்ணன்

தமிழக சட்டப் பேரவையில், 2008-09ஆம் ஆண்டுக்கான பட்ஜெட் கடந்த 20ஆம் தேதி தாக்கல் செய்யப்பட்டது. வழக்கமாக பட்ஜெட் தாக்கல் செய்யும்போது, பார்வையாளர் மாடத்தில் முக்கியப் பிரமுகர்கள் அமர்ந்து சபை நடவடிக்கைகளைக் கவனிப்பதுண்டு. பெரும்பாலும் அவர்கள் ஆளும் கட்சிக்கு வேண்டியவர்களாகவே இருப்பார்கள். இந்த முறை நிதிநிலை அறிக்கையை நிதியமைச்சர் அன்பழகன் தாக்கல் செய்யும்போது, மாடத்தில் கனிமொழி, தயாளு அம்மாள் மற்றும் இயக்குனர் அமிர்தத்தின் மனைவி ஆகியோர் அமர்ந்திருந்தார்கள். நிதியமைச்சர் பட்ஜெட்டைப் படிக்கும்போது அவர்களும் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட பட்ஜெட் நகலைப் படித்துக்கொண்டிருந்தார்கள்.



படம் : ராஜன்

''இது அவையின் உரிமையை மீறிய செயல். சட்டமன்ற உறுப்பினர் அல்லாதவர்களிடம், நிதியமைச்சர் படிக்கும்போதே பட்ஜெட் நகல் இருப்பது சரியல்ல'' என்கிறார் ம.தி.மு.க. தலைமை கழகச் செயலாளரும் வழக்கறிஞருமான கே.எஸ்.ராதாகிருஷ்ணன்.

''நமது நாடு பிரிட்டிஷ் பாராளுமன்ற நடைமுறையைப் பின்பற்றுகிற நாடு. பெரும்பாலான காமன்வெல்த் நாடுகள் 'மே' என்பவர் தொகுத்தளித்த பாராளுமன்ற விதிமுறைகளைதான் கடைபிடிக்கின்றன. அதன்படி அரசின் பட்ஜெட் என்பது மிகவும் ரகசியமான ஒன்று. மத்திய அரசின் பட்ஜெட், நிதி இலாகாவுக்குச் சொந்தமான அச்சகத்திலேயே அச்சடிக்கப்படும். இது தொடர்பாக அங்கே வேலை செய்யும் பணியாளர்கள் ஒரு வாரம் வீட்டுக்குச் செல்ல முடியாது. பட்ஜெட் அன்று மத்திய நிதியமைச்சர் மக்களவையில் படித்து முடித்தவுடன்தான் நகல்கள் பாராளுமன்ற உறுப்பினர்களுக்கும், மற்றவர்களுக்கும் வழங்கப்படும். இதுதான் நடைமுறை. எல்லா சட்டமன்றங்களிலும் இதுதான் கடைபிடிக்கப்பட வேண்டும். ஆனால், தமிழகம் மற்றும் சில மாநில சட்டமன்றங்களில், மாநில நிதியமைச்சர் படிக்கத் துவங்கும்போதே சட்டமன்ற உறுப்பினர்களுக்கும் பட்ஜெட்டை விநியோகிக்கிறார்கள். இதுவும் தவறு. இப்போது ஒரு படி மேலே போய், உறுப்பினர் அல்லாதவர்களுக்கும் நகல்களை, நிதியமைச்சர் படிக்கும்போதே கொடுக்கிறார்கள். நிதியமைச்சர் படித்து முடிக்க மூன்று மணி நேரம் ஆகும். அவர் படித்து முடிக்கும் முன்னரே உறுப்பினர் அல்லாதவர் ஒருவருக்கு பட்ஜெட் நகல் கிடைத்தால், 'முக்கிய அறிவிப்புகளை'த் தெரிந்துகொண்டு தொழிலதிபர்கள் மற்றும் வியாபாரிகளுக்குத் தகவல் சொல்லிவிட முடியும். இதன் பொருட்டே ரகசியம் காப்பது அவசியமாகிறது'' என்று விளக்குகிறார் ராதாகிருஷ்ணன்.

– கௌசி

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57* Registered No.TN/CC(S)DN/144/06-08 Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08 Registered as a Newspaper in Srilanka.